ஸ்ரீ:
ஸ்ரீமதே ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ஹ பரப்ரஹ்மணே நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

# இதுவே ஸ்ரீதேசிக ஹ்ருதயம்

ஆர். ராதா

# இதுவே ஸ்ரீதேசிக ஹ்ருதயம்

**By R. Radha**



முதல் பதிப்பு : 2019



**Price : Not for Sale**

**Printed by :**
**Jai Bhavani Offsests**
Old No. 52, Mandaveli Lane,
Mylapore, Chennai - 600 004
Phone : 044 - 4303 3063
Mobile : 9840214407
e-mail : klmprinters@gmail.com

## பொருளடக்கம்

ஸ்ரீ:

யஸ்யா பவத் பக்த ஜனார்த்தி ஹந்து:
பித்ருத்வம் அண்யேஷு அவிசார்ய தூர்ணம்
ஸ்தம்பேவதாரஸ்தம் அனன்ய லப்யம்
லக்ஷ்மீ ந்ருஸிம்ஹம் சரணம் ப்ரபத்யே

யோநித்யமச்யுத பதாம் புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ் ததிதராணி த்ருணாயமேனே
அஸ்மத்குரோர் பகவதோஸ்ய தயைகஸிந்தோ
ராமானுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரத்யே

ராமானுஜ தயா பாத்ரம் ஞான வைராக்ய பூஷணம்
ஸ்ரீமத் வேங்கட நாதார்யம் வந்தே வேதாந்த தேசிகம்

கேசவார்ய க்ருபாபாத்ரம் தீஸமாதி குணார்ணவம்
ஸ்ரீசடாரி யதீஸாநம் தேசிகேந்த்ரமஹம்பஜே
ப்ரபத்யே நிரவத்யாநாம் நிஷத்யாம் குணஸம்பதாம்
சரணம் பவபீதானாம் சடகோப முநீச்வரம்

ஸ்ரீரங்கநாத சடகோப யதீந்த்ர த்ருஷ்டம்
லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ சடஜித் கருணைக பாத்ரம்
ஸ்ரீரங்க வீர ரகுராட் சடகோப ஹ்ருத்யம்
வேதாந்த தேசிக யதீந்த்ரமஹம் ப்ரபத்யே

ஸ்ரீமத்ரங்க சடாரி ஸம்யமிவராத் லப்தாக மாந்தத்வயம்
ஸ்ரீமத் வீர ரகூத்வஹாத்ய சடஜித் பாதாரவிந்தாஸ்ரயம்
ஸ்ரீமத் வேதவதம்ஸ தேசிகயதே: காருண்ய வீக்ஷாஸ்பதம்
ஸேவே ரங்கதுரீண சாஸனவஸம் நாராயணம் யோகினம்

வேதாந்த தேசிக யதீந்த்ர கடாக்ஷலப்த
த்ரையந்த ஸாரமனவத்ய குணம் புதாக்ரியம்
நாராயணாத்ய யதிதுர்ய க்ருபாபிஷிக்தம்
ஸ்ரீரங்கநாத யதி சேகரமாஸ்ரயாம:

ஸ்ரீமத் வேதாந்த ராமானுஜமுனி கருணாலப்த வேதாந்த யுக்மம்
ஸ்ரீமத் ஸ்ரீவாஸயோகீஸ்வர குருபதயோரர்ப்பித ஸ்வாத்ம பாரம்
ஸ்ரீமத் ஸ்ரீரங்கநாதா ஹ்வயமுனிக்ருபயா ப்ராப்த மோக்ஷா ஸ்ரமம்தம்
ஸ்ரீமத் வேதாந்த ராமானுஜ முனிமபரம் ஸம்ஸ்ரயே தேசிகேந்த்ரம்

ஸ்ரீரங்கேச சடாராதி யதீசான பதாஸ்ரயம்
ந்ருஸிம்ஹ ராகவார்யம் தம் வந்தே ஸாரக்ஞ பூஷணம்

ஸ்ரீமத் ரங்கஸடாரி யோகி சரண ந்யஸ்தாத்ம ரக்ஷா பரம்
ஸ்ரீமத் ரங்கஸடாரி வீர ரகுராட் லப்தாக மாந்தத்வயம்
ஈர்ஷ்யாடம்ப விவர்ஜிதம் சுபகுணை: பாந்தம் மஹத்வம்ஸஜம்
வந்தே வத்ஸ விபூஷணம் புதவரம் ஸ்ரீக்ருஷ்ணமார்யம் ஸதா

## முன்னுரை

வேத மார்க்கமான, வ்யாஸ ஸித்தாந்தத்தை அடியொற்றி, ஸ்ரீராமானுஜர் தனது நவ க்ரந்தங்களைக் கொண்டு, வ்யாஸ ஸித்தாந்தத்தை ஸ்தாபித்தார். அவையாவது, ஸ்ரீபாஷ்யம், தீபம், ஸாரம், வேதார்த்த ஸங்க்ரஹம், ஸ்ரீ கீதா பாஷ்யம், சிறிய கத்யம் (ஸ்ரீரங்க கத்யம்), பெரிய கத்யம் (சரணாகதி கத்யம்), ஸ்ரீ வைகுண்ட கத்யம், மற்றும் நித்யம் என்கிற ஒன்பது க்ரந்தங்களாகும்.

அந்த க்ரந்தங்களின் வாயிலாக அவர் ஸாத்யோபாய அனுஷ்டானத்தை வலியுறுத்தினார்.

ஸ்ரீவேதவ்யாஸர் உபநிஷத்துக்கு வியாக்யானமாக 'ப்ரஹ்ம ஸூத்ரத்தை' அருளிச் செய்தார். ப்ரஹ்ம ஸூத்ரத்திற்கு வ்யாக்யானமாக ஸ்ரீபாஷ்யகாரர் 'ஸ்ரீபாஷ்யம்' அருளிச் செய்தார். ஆக, ஸ்ரீபாஷ்யம், ஸூத்ரத்திற்கு வ்யாக்யானமாக அமைவதன் மூலம், உபநிஷத்துக்கு வ்யாக்யானமாயிற்று. அதில், பக்தி யோகத்தைப் பற்றி விரிவாக, பூர்வபக்ஷ நிரஸன பூர்வகமாக, ஸித்தாந்தம் அருளியுள்ளார் ஸ்ரீராமானுஜர்.

சரணாகதி கத்யத்தில் ஸ்வதந்த்ர ப்ரபத்தியை அருளிச் செய்து, தானும் ஒரு பங்குனி உத்தர நன்நாளில் பெருமாள் தாயார் சேர்த்தியில் சரணாகதியை அனுஷ்டித்தார் ஸ்ரீராமானுஜர்.

ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸாத்யோபாயத்தை ஸ்ரீராமானுஜ க்ரந்தங்களை அடியொற்றியே தனது க்ரந்தங்களில் விளக்கியுள்ளார்.

ஆனால், ஸித்தாந்தி ஏகதேசிகளான பிள்ளைலோகாசார்யர் வழி வந்தவர்கள், தென்கலை ஸம்ப்ரதாயத்தவர்கள், சரணாகதி அனுஷ்டானம் அநுபாயம் என்றும் பக்தி யோகமாவது ஸ்வரூப விருத்தம் என்றும் கூறி ஸ்ரீ ராமானுஜரின் க்ரந்தங்களுக்கு மாற்று

கருத்தை தங்களது க்ரந்தங்களில், ஸ்ரீராமானுஜ ஸித்தாந்தமாக அருளியுள்ளனர்.

ஸ்வாமி ஸ்ரீதேசிகன் 'ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம்', மற்றும் 'நிக்ஷேபரக்ஷை' போன்ற க்ரந்தரங்களில் பிள்ளைலோகாசார்யரின் கொள்கைகளுக்கு மறுப்பு தெரிவித்து உள்ளார்.

பிள்ளைலோகாசார்யர் வழி வந்த அண்ணங்கராசார்யர்,

1960ல் 'தேசிக ஹ்ருதயம்' என்றொரு கட்டுரையை வெளிக் கொண்டு வந்தார். அந்த கட்டுரையை, அந்த சமூகத்தைச் சேர்ந்த ஒருவர் எனக்கு சமீபத்தில் அனுப்பியிருந்தார். அதில் ஸ்வாமி ஸ்ரீதேசிகனின் க்ரந்தங்களிலிருந்து, அண்ணங்கராசார் ஒரு சில வரிகளை மட்டும் கொண்டு மற்றவற்றை கைவிட்டு, ஸ்வாமி ஸ்ரீதேசிகன், பிள்ளைலோகாசார்யர் கருத்துக்களை ஆதரித்தது போல், ஒரு தோற்றத்தை ஏற்படுத்தியுள்ளார்.

**அண்ணங்கராசார், தன் ஸம்ப்ரதாயத்தை தான் விரும்பியபடி விளக்கி இருந்தால், அடியேன், பிள்ளை-லோகாசார் கொண்டிருந்த கொள்கைகள் யாவும் ப்ரமாண ஸம்ப்ரதாய விருத்தங்கள் என்கிற விஷயத்தையும் அவரது கொள்கைகளை அசாஸ்த்ரீயங்கள் என்று ஸ்வாமி ஸ்ரீதேசிகன் கண்டித்திருக்கிறார் என்கிற விஷயத்தையும் அடியேனாக கூற முன் வந்திருக்கமாட்டேன். ஆனால், அவரது பதிவு, அவர் பின்பற்றாத ஸ்ரீதேசிக ஸம்ப்ரதாயத்தை மாற்றி அமைக்க நினைப்பது போல் இருப்பதாலும், வரும் தலை முறையினர் ஸ்ரீதேசிக ஸம்ப்ரதாய விஷயத்தில் கலக்கம் அடையக்கூடாது என்பதாலும் அடியேனுக்கு காலக்ஷேபம் ஸாதித்தருளிய ஸ்ரீ உ.வே. திருக்கள்ளம் நரசிம்ஹராகவாசார்யர் ஸ்வாமி, ஸ்ரீ உ.வே. வில்லிவலம் கிருஷ்ணமாச்சார்யர் ஸ்வாமி (45ம் பட்டம் ஸ்ரீமத்**

அழகியசிங்கர் பூர்வாச்ரமம்) ஸ்ரீ உ.வே. புரிசை கிருஷ்ணமாச்-சார்யர் ஸ்வாமி, திருக்குடந்தை ஸ்ரீமத் ஆண்டவன் முதலான ஆசார்யர்களின் அனுக்ரஹத்தை முன்னிட்டுக் கொண்டும், திவ்யதம்பதிகளான ஸ்ரீமந்நாராயணனுடைய அனுக்ரஹத்தை முன்னிட்டுக் கொண்டும், ஸ்வாமி ஸ்ரீதேசிகன் திருவடிகளையே உபாயமாகவும், ப்ராப்யமாகவும் பற்றி நிற்கும் அடியேனால் 'இதுவே ஸ்ரீதேசிக ஹ்ருதயம்' என்கிற தலைப்பில் இந்த புத்தகம் எழுதப்படுகிறது.

அண்ணங்கராசார்யரின் தேசிக ஹ்ருதயத்தில், 'ப்ரபத்தி உபாயம் அன்று', 'பிராட்டி விஷய விமர்சங்கள்' என்கிற இவ்விரண்டு தலைப்புகளில் வெளிவந்த விஷயங்களுக்கு மறுப்பு, இந்த புத்தகத்தில் எழுதப்பட்டிருக்கிறது. மேலும், இந்த மறுப்பின் மூலமாகவே, தேசிகஹ்ருதயத்தில் வெளிவந்த மற்றுமுள்ள விஷயங்களும் உண்மைக்குப் புறம்பானவையே என்பதை ஸஹ்ருதயர் அறிந்து கொள்ளலாம்.

**- ஆர். ராதா**

ஸ்ரீ:
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

# 1 பிள்ளைலோகாசார்யரும் ஸ்வாமி ஸ்ரீதேசிகனும் ஒத்த கருத்துடையவர்களா?

**"தேசிக ஹ்ருதயம்"**
கட்டுரையில் வெளிவந்த விஷயமாவது:

சிலர், வேதாந்தவாசிரியர் பிள்ளைலோகாசார்யர் கொண்டிருந்த கொள்கைகளை அசாஸ்த்ரீயங்கள் என்று கண்டித்துவிட்டார் என்று சொல்லிப் போவது ஆதாரமற்றது என்று கூறியிருக்கிறார்.

**இதற்கு மறுப்பு பின்வருமாறு காட்டப்படுகிறது.**

ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம் என்னும் க்ரந்தத்தில் பல அதிகாரங்களிலே பிள்ளைலோகாசார்யர் கொண்டிருந்த கொள்கைகளை ப்ரமாண ஸம்ப்ரதாய விருத்தங்கள் என்று கண்டித்திருக்கிறார். உதாஹரணத்திற்கு சில விஷயங்களைக் காட்டுவோம்.

ஸ்ரீவசநபூஷணம் 71 - ஸ்வயத்நநிவ்ருத்தி பாரதந்த்ர்ய பலம். அதாவது பாரதந்த்ர்ய ஸ்வரூபத்தை அநுஸந்தித்தால் எம்பெருமானைப் பெறுவதற்கு தான் ஒரு யத்நம் பண்ணுகையாகிற ஸ்வயத்நம் குலையும் என்று பிள்ளைலோகாசார்யரால் அருளிச்-செய்யப்பட்டிருக்கிறது.

இதை,

**"அத்யந்த பாரதந்த்ர்யத்தால் அவன் கொடுத்த ஸ்வாதந்த்ர்யத்தை சுமந்து அவனுக்கு அபிமதங்களான உபாயங்களை அநுஷ்டிக்கையும், பலம் பெறுகைக்கு அவன் கைபார்த்திருக்க வேண்டுகையும் ஸித்திக்கும்" ..........**

ஆகையால் "சேஷபூதனுமாய், பரதந்த்ரனுமான இவனுக்கு யதாதிகாரம் ஸ்வரக்ஷணார்த்த வ்யாபாரம் பண்ணக் குறையில்லை"

என்று ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸாத்யோபாய சோதநாதிகாரத்தில் கண்டித்தருளினார்.

ஸ்ரீபாஷ்யம் 2ம்அத்யாயம் 3ம்பாதம் பராயத்தாதிகரணத்தில் "க்ருத ப்ரயத்நாபேக்ஷஸ்து விஹித ப்ரதிஷித்த அவையர்த்யாதிப்ய:" என்கிற ஸூத்ர வ்யாக்யானத்தில் ஜீவன் செய்கிற ப்ரயத்நத்தை முன்னிட்டே பரமாத்மா ஜீவனைச் செய்விக்கிறான் என்று ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்கிறார்.

முதல் க்ஷணத்தில் ஜீவனுக்கு ஸ்வாதந்த்ர்யம் உண்டு. முதலில் ஜீவன் செய்யும் ப்ரயத்நத்தை அபேக்ஷித்துத்தான் பரமாத்மா ஜீவனை செயல்படுத்துவது என்பதை இவ்வதிகரண ச்ருதப்ரகாசிகையில் காணலாம்.

இதைத் திருவுள்ளம் பற்றியே ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஜீவனுக்கு எம்பெருமானால் கொடுக்கப்பட்ட ஸ்வாதந்த்ர்யம் உண்டு என்று அருளிச்செய்தார்.

ஸ்ரீவசநபூஷணம் 132 - "அது தோல் புரையேபோம் இது மர்மஸ்பர்சி." அதாவது அஹங்கார கர்ப்பமான இந்த உபாஸநம் ஆத்ம ஜ்ஞாநம் பிறந்தவனுடைய செயலாய் எம்பெருமானுக்கு அதிசயத்தை விளைக்கையாகிற சேஷத்வரூபமான நிஷ்க்ருஷ்ட வேஷத்துக்கு விரோதியாய் எம்பெருமான் ஒருவனுக்கே பரதந்த்ரமாய் இருக்கையாகிற ஸ்வரூபத்துக்கு நாசகமாய் இருக்கும் என்று பிள்ளைலோகாசார்யரால் அருளிச் செய்யப்பட்டிருக்கிறது.

இதை,

"உபாஸநாதிகள் அஹங்காராதி கர்ப்பங்கள் என்னுமிடம் சாஸ்த்ரம் இசையாதிருக்கச் செய்தே ஆரோபித்தார்கள் அத்தனை"

என்று ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸாத்யோபாய சோதநாதிகாரத்தில் கண்டித்தருள்கிறார்.

முமுக்ஷுப்படி ஸூத்திரம் 201ல், 'பரி' என்கிற உபஸர்க்கத்தாலே பாதகாதிகளை விடுமாப் போலே ருசி வாசனைகளோடும் லஜ்ஜையோடும் கூட மறுவலிடாதபடி விட வேணும் என்கிறது. அதாவது, 'அத பாதக பீதஸ்த்வம் என்று தர்ம தேவதை பாதகமாகச் சொன்ன உபாயாந்தரங்களை' என்று பிள்ளைலோகாசார்யரால் அருளிச்செய்யப்பட்டிருக்கிறது.

இதை,

"அத பாதக பீதஸ்த்வம் என்று தர்ம தேவதை தன் புத்திரனுக்கு உபாஸநாதிகளை ப்ராப்ய விரோதிகள் என்று நினைத்து நிந்தித்தது என்னில் அதுவும் அத்யந்த அனுபபன்னம்" ...... "அத பாதக பீதஸ்த்வம் என்கிற இடத்திலும் பாதக சப்தத்தாலே உபாஸநாதிகளை நிந்திக்கிறது என்கைக்கும் ப்ரமாணம் இல்லை"

என்று ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸாத்யோபாய சோதநாதிகாரத்தில் கண்டித்தருளினார்.

இத்தால் பிள்ளைலோகாசார்யருடைய அசாஸ்த்ரீயமான கொள்கைகள் யாவும், ஸ்வாமி ஸ்ரீதேசிகனால் கண்டிக்கப்-படுகின்றன என்பதில் ஆதாரம் உள்ளது என்பதை ஸஹ்ருதயர் அறிந்து கொள்ளலாம்.

ஸ்ரீ:

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

# 2 ப்ரபத்தி மோக்ஷ ஸாதனமாகுமா?

"தேசிக ஹ்ருதயம்"
கட்டுரையில் வெளிவந்த விஷயமாவது:

ந்யாஸ தசகத்தில்,

ஸ்வாமீ ஸ்வசேஷம் ஸ்வவசம்
ஸ்வபரத்வேந நிர்பரம் |
ஸ்வதத்த ஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மின்
ந்யஸ்யதி மாம் ஸ்வயம் ||

என்னும் ச்லோகத்தில் ஒன்பதின்கால் ஸ்வசப்த ப்ரயோகம் செய்தருளியுள்ளார் தேசிகன். இதனால் சேதனனுடைய முயற்சி நாற்றம் வேரற அறுக்கப்படுகின்றமை அறிந்தால் உபாயமென்றும், ஸாத்யோபாயமென்றும் வாய் திறக்க வழியில்லை.

ஸாத்யோபாயம் என்றால், யாரால் ஸாதிக்கப்படும் உபாயம் என்று கேள்வி வரும். சேதனனால் ஸாதிக்கப்படுவதாக சொல்லியாகவேணும். இச்சொல்லை ஒன்பது வாள்கள் கொண்டு கண்டிக்கிறதன்றோ கீழே காட்டிய தேசிக ச்லோகம் என்று இந்த ச்லோகத்திற்குப் பொருள் காட்டியுள்ளார் பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்யர் ஸ்வாமி.

இதற்கு மறுப்பு பின்வருமாறு காட்டப்பெறுகிறது:

மேலே கூறப்பட்ட "ஸ்வாமீ ஸ்வசேஷம்" என்ற ந்யாஸ தச கத்தின் ச்லோகத்திற்கு பொருளாவது:- ஸ்ரீமந் நாராயணன் தனக்கு சேஷனாய் தனக்கு வசப்பட்டவனான அதாவது

பரதந்த்ரனான அடியேனை தன்னாலேயே அளிக்கப்பட்ட தன்னைப் பற்றிய ஜ்ஞானத்தாலே, தன் பயனுக்காகவே தனக்குப் பொறுப்பு இல்லாதவாறு, தன் பொறுப்பாக தானே தன்னிடத்தில் ஸமர்ப்பித்துக் கொள்கிறான் என்பது. இவ்வாறு அனுஸந்திப்பது, ஸாத்வீக த்யாகம் எனப்படும். இந்த ஸாத்வீக த்யாகமானது, கர்த்ருத்வ த்யாகம், மமதா த்யாகம், பல த்யாகம், பல உபாயத்வ த்யாகம் என்கிற நான்கு பகுதிகளைக் கொண்டது.

ஒரு காரியத்தை தான் செய்வதாகக் கருதாமல், அதாவது ப்ரபத்தி அனுஷ்டானத்தை தான் செய்வதாக நினைக்காமல், எம்பெருமானே தன்னைக் கொண்டு செய்விப்பதாக நினைக்க வேண்டும். இதுவே கர்த்ருத்வ த்யாகம் எனப்படும். தான் செய்கிற ப்ரபத்தியாகிற செயலை தனக்காக என்கிற எண்ணத்தை விடுகையே மமதா த்யாகம் ஆகும். எம்பெருமானே தனக்காகச் செய்வித்துக் கொள்கிறான் என்று நினைக்க வேண்டும். ப்ரபத்தியை அனுஷ்டிப்பதால் வரும் பலன் தனக்கு என்கிற எண்ணத்தை விடுகையே பலத்யாகம் ஆகும். ப்ரபத்தியை அனுஷ்டிப்பதால் வரும் பலன் எம்பெருமானையே சேர்ந்ததாக நினைக்கவேண்டும். எம்பெருமானுடைய ப்ரஸாதத்தின் பொருட்டு சேதனனால் அனுஷ்டிக்கப்படுகிற ப்ரபத்தியானது, ப்ரதான பலமான மோக்ஷத்திற்கு வ்யவஹித காரணமாகையாலும், அசேதனமாகையாலே பலப்ரதாந ஸங்கல்ப ஆச்ரயம் அல்லாமையாலும், வ்யாஜமாத்ரமான ப்ரபத்தியில் பலஉபாயத்வ த்யாகம் கூடும். பலனைக் கொடுக்க வேண்டுமென்று ஸங்கல்பித்து நேரிடையாக பலத்தை கொடுக்கிறவனுக்கன்றோ ஸாக்ஷாத் உபாயத்வம். ஆக, அசேதநமாய், ஸங்கல்ப ரஹிதமாய், வ்யாஜமாத்ரமாய் நிற்கும் சாஸ்த்ர விஹிதமான ஸாத்யோபாயமான ப்ரபத்தியை, பலப்ரதனாய்க் கொண்டு ஸித்தோபாயமாய் நிற்கும் ஸர்வேச்வரனோடு, ஒரு கோவையாக சேர்த்து உபாயமாக நினைத்தல் உசிதமன்று என்பதே பல உபாயத்வ த்யாகமாகும்.

ந்யாஸ தசகத்தில் ப்ரபத்தியாகிற அங்கி ஸ்வரூபத்தை முதல் ச்லோகத்தில் விளக்கியருளினார். ப்ரபத்திக்கான அங்கங்களை இரண்டாவது ச்லோகத்தில் விளக்கியருளினார். ஸாத்வீக த்யாகத்தை "ஸ்வாமீ ஸ்வசேஷம்" என்கிற மூன்றாவது ச்லோகத்தில் அருளிச்செய்து மோக்ஷார்த்த ப்ரபத்தியை ஸாத்வீக த்யாகத்தோடு அனுஷ்டிக்கவேண்டும் என்பதை விளக்கியருளினார்.

இவ்விஷயங்களை ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில், ஸாங்கப்ரபதநாதிகாரத்தில் விளக்கி அருளிச்செய்கிறார்.

"இதில் ஸாங்க அனுஷ்டானமாயற்றது, கர்த்ருத்வ த்யாக, மமதா த்யாக, பல த்யாக, பல உபாயத்வ த்யாக பூர்வகமான ஆநுகூல்ய ஸங்கல்பாதி அர்த்தாநுஸந்தானத்தோடே குருபரம்பரா உபஸத்தி பூர்வக த்வய வசந முகத்தாலே ஸ்வரூப பல ந்யாஸ கர்ப்பமான ஆத்மரக்ஷா பரஸமர்ப்பணம் பண்ணுகை.

இக்கர்த்ருத்வ த்யாகத்திற்கு நிபந்தநம் - தன் கர்த்ருத்வமும் அவனடியாக வந்தது என்று தனக்கு யாவதாத்மபாவியான பகவதேக பாரதந்த்ர்யத்தை அறிகை. மமதா த்யாகத்துக்கும், பல த்யாகத்துக்கும் நிபந்தநம் ஆத்மாத்மீயங்களுடைய ஸ்வரூப அநுபந்தி பகவதேக சேஷத்வ ஜ்ஞானம். பலஉபாயத்வ த்யாகத்துக்கு நிபந்தநம் சரண்ய ப்ரஸாதநமான இவனுடைய அனுஷ்டானம் ப்ரதாந பலத்துக்கு வ்யவஹித காரணமாகையும், அசேதனமாகையாலே பலப்ரதாந ஸங்கல்ப ஆச்ரயம் அல்லாமையும்,

ஈச்வரன் பலோபாயமாகிறது ஸஹஜஸௌஹார்த்தத்தாலே கரணகளேபர ப்ரதாநம் தொடங்கி, த்வய உச்சாரண பர்யந்தமாக ஸர்வத்துக்கும் ஆதிகாரணமான தானே ப்ரஸாத பூர்வக ஸங்கல்ப விசேஷ விசிஷ்டனாய்க் கொண்டு அவ்யவஹித

காரணமாகையாலும், உபாயாந்தர ஸ²ந்யனுக்கு அவ்வோ உபாய ஸ்தாநத்திலே நிவேசிக்கையாலும்,

இங்ஙனிருக்கைக்கடி தர்மிக்ராஹகமான சாஸ்த்ரத்தாலே அவகதமான வஸ்து ஸ்வபாவமாகையால், இவ்வர்த்தம் யுக்திகளால் சலிப்பிக்கவொண்ணாது"

என்று அருளிச்செய்கிறார்.

மேலும், இவ்விஷயத்தை ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில், ஸித்தோபாய சோதநாதிகாரத்தில், கீழ்வருமாறு விளக்கியருளு-கிறார்.

"யதா ப்ரமாணம் ஸ்வரக்ஷண பரஸமர்ப்பணம் பண்ணினவனுக்கு, பின்பு ஸ்வரக்ஷணார்த்த வ்யாபாரத்தில் ப்ராப்தியில்லை. முன்பு தானும் ஸ்வரக்ஷணார்த்தமாக பண்ணின ஸமர்ப்பணாதி வ்யாபார ம் ஸர்வ கர்த்தாவான அவன் தானே பீஜாங்குர ந்யாயத்தாலே அநாதியாக ப்ரவர்த்திப்பித்த கர்மப்ரவாஹ விபாக விசேஷத்திலே வந்ததொரு யாத்ருச்சிக ஸுக்ருதாதி விசேஷகாரணத்தை முன்னிட்டுக் கொண்டு பண்ணுவித்தானாகையால் நாமே நம்மை ரக்ஷித்துக் கொள்கிறோம் என்று இருக்கப் ப்ராப்தியில்லை. ஸர்வ ரக்ஷகனாக மூலமந்த்ராதிகளிலே சிக்ஷிதனான இவன் தானே நம்மை ஓர் உபாயத்திலே வ்யாபரிப்பித்து அந்த வ்யாபாரத்தாலே ப்ரஸந்நனாய் ரக்ஷிக்கிறான் என்றிருக்கப் பிராப்தம்.

ஸ்வாமீ ஸ்வசேஷம் ஸ்வவசம்
ஸ்வபரத்வேந நிர்பரம் |
ஸ்வதத்த ஸ்வதியா ஸ்வார்த்தம் ஸ்வஸ்மின்
ந்யஸ்யதி மாம் ஸ்வயம் ||

இது ஆத்ம ஸமர்ப்பண தசையில், க்யாதி-லாப-பூஜா-பல ஸங்க-கர்த்ருத்வ-உபாயத்வங்களாகிற தூரலற்ற பகவத் அனுஸந்தான கட்டளை. ஆகையால், தாய் முலைப்பால் போலே வருகிற ஈச்வர ப்ரஸாதத்திற்கும், ஸ்தநந்தயனுடைய முலையுண்கிற வ்யாபாரம் போலே இவனுடைய அபேக்ஷாதிகள். இத்தால் ஸித்தோபாய ஸ்வரூபத்திற்குக் கொத்தை வாராது."

என்றும் அருளிச்செய்கிறார்.

இப்படி ஸ்வாமி ஸ்ரீதேசிகன் திருவுள்ளத்தை அவருடைய ஸ்ரீஸூக்திகளைக் கொண்டு அஜ்ஞான ஸம்சய விபர்யயமற தெளிவாக பகவத் கடாக்ஷ விசேஷத்தாலே அறிந்தால், சாஸ்த்ர விஹிதமான ப்ரபத்தி சேதனனால் அனுஷ்டிக்கப்படவேண்டிய உபாயமென்றும் ஸாத்யோபாயமென்றும் "வாய் திறக்க வழியில்லை" என்று கூறியிருப்பது பொருந்தாததாகும். மாறாக, வாய் திறக்க வழியுண்டு என்பதே நன்கு தெளிவாகும்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

## 3 ப்ரபத்தியின் ரூபம் அனுஷ்டானத்தை விலக்குகிறதா?

"தேசிக ஹ்ருதயம்"
கட்டுரையில் வெளிவந்த விஷயமாவது :

ப்ரபத்தியாவது என்ன? "த்வமேவ உபாயபூதோ மேபவ இதி ப்ரார்த்தநா மதி: சரணாகதி:" என்று சாஸ்த்ரம் கூறுகிறது. எம்பெருமானையே உபாயமாக அத்யவஸிக்கும் அதுவே 'ப்ரபத்தி' என்பது. இத்தகைய ப்ரபத்தியானது, தன்னிடத்தில் உபாயத்வ புத்தியை எங்ஙனே ஸஹிக்கும்? ப்ரபத்தி என்கிற வஸ்து தேறும் போதே அதன் அனுபாயத்வம் தேறியே தீரும் என்று ந்யாய ஸித்தாஞ்சனத்தில் ஸ்பஷ்டமாக அருளிச் செய்கிறார். (அதில் ஜீவ பரிச்சேதத்தில்)

**இயம் கேவல லக்ஷ்மீச உபாயத்வ ப்ரத்யயாத்மிகா |**
**ஸ்வஹேதுத்வ தியம் ருந்தே கிம்புந: ஸஹகாரிணாம் ||**

என்கிற ச்லோகம் ந்யாய ஸித்தாஞ்சநமேயாகும். இந்த ச்லோகத்தினால் ப்ரபத்தியின் அநுபாயத்வம் தர்மிக்ராஹக ப்ரமாண ஸித்தம் என்று சிலாலிஹிதம் ஆக்கினபடி. சாஸ்த்ரஜ்ஞர்களில் தலைவரான தேசிகன் சாஸ்த்ர கதி விருத்தமாக ப்ரபத்தி உபாயம் என்று நெஞ்சாலும் நினைக்கமாட்டார் அன்றோ?" என்று அந்தக் கட்டுரையில் கூறியுள்ளார்.

**இதற்கு மறுப்பு பின்வருமாறு காட்டப்பெறுகிறது:**

ப்ரமாணவச்யரான ஸ்வாமி ஸ்ரீதேசிகன் "ந்யாஸ: பஞ்சாங்க ஸம்யுத:", "ப்ரபத்திம் தாம் ப்ரயுஞ்ஜீத ஸ்வாங்கை: பஞ்சபி

ராவ்ருதாம்" இத்யாதி ப்ரமாணங்களில் விதிக்கப்படுகிற அங்கங்களோடு கூடின அங்கியான ப்ரபத்தி அனுஷ்டானத்திற்கு விரோதம் வாராதபடி "த்வமேவ உபாயபூதோ மே பவ இதி ப்ரார்த்தநா மதி: சரணாகதி:" என்கிற ப்ரமாண வாக்கியத்திற்கு விரிவான அர்த்தத்தை ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸாத்யோபாய சோதநாதிகாரத்தில், அருளிச் செய்கிறார். ஸாத்யோபாய சோதநாதிகாரத்தின் தொடக்கத்தில்,

"இப்படி ஸர்வஜ்ஞமாய், ஸர்வசக்தியாய், பரமகாருணிகமாய், ஸர்வசேஷியாய், ஸபத்நீகமாய், ஸர்வலோக சரண்யமான ஸித்தோபாய விசேஷம் தெளிந்தாலும்,

ஆரோக்யம் இந்த்ரியெளஸல்பண்யம் ஐச்வர்யம் சத்ருசாலிதா |
வியோகோ பாந்தவைராயு: கிம் தத் யேநாத்ர துஷ்யதி ||

என்கிறபடியே, விவேகமில்லாதார்க்குக் குணமாய்த் தோன்றினவையும், தோஷமானபடி கண்டு ஸம்ஸார வைராக்யம், பூர்ணமானாலும் "பரமாத்மநி யோ ரக்த:" என்கிறபடியே ப்ராப்ய ருசி உண்டானாலும்,

மஹதா புண்ய பண்யேந க்ரீதேயம் காயநெளஸ்த்வயா |
ப்ராப்தும் துக்கோததே: பாரம் த்வர யாவந்ந பித்யதே ||

என்கிறபடியே த்வரை பிறந்தாலும், அநாதியாக அநுவ்ருத்தமான ஆஜ்ஞாதிலங்கநமடியாகப் பிறந்து நிற்கிற பந்தகமான பகவந் நிக்ரஹத்துக்குப் ப்ரசமநமாக 'மாமேகம் சரணம் வ்ரஜ' என்று விதிவாக்யத்தாலும், 'ப்ரபத்யே' என்று அனுஷ்டான வாக்யத்தாலும், சொல்லப்பட்ட ஸாத்யோபாய விசேஷம் தெளியாதபோது, ஸித்தோபாய பூதனான ஸர்வேச்வரனை வசீகரிக்க விரகில்லை ஆகையால் அதின் அதிகாரத்திலும், ஸ்வரூபத்திலும், பரிகரங்களிலும், வரும் கலக்கங்களை சமிப்பிக்கிறோம்."

என்று அருளிச்செய்கிறார். இதற்கு மேல், இந்த அதிகாரத்திலேயே, ப்ரபத்தியின் ஸ்வரூபம் பற்றி வரும் கலக்கங்களையும் பரிஹரிக்கிறார்.

"த்வமேவ உபாயபூதோ மே பவ இதி ப்ரார்த்தநா மதி: சரணாகதி:" என்கிறதுவும் தத் ப்ரகரணத்திலே ப்ரதாநமாகச் சொன்ன பரந்யாஸ பர்யந்தம் என்னுமிடம் அவதாரண ஸஹக்ருத உபாய சப்தத்தாலே வ்யஞ்ஜிதம். ஓரொரு விவக்ஷைகளாலே அங்கங்களை ப்ரதாநமாகச் சொல்லுகை லோகத்திலும் உண்டு. ஆலம்ப சப்தம் யாக பர்யந்தமானாற் போலே 'சரணம் வ்ரஜ' இத்யாதிகளின் தாதுக்கள் ந்யாஸ நிக்ஷேப த்யாகாதி சப்தங்களாலே சொல்லப்பட்ட ஆத்ம யாகத்தைச் சொல்லுகை வைதிக மர்யாதைக்கு அநுகுணம்"

என்று அருளிச்செய்கிறார். இதன் பிறகு

"இப்படி அங்க பஞ்சக ஸம்பந்நமான ஆத்மரக்ஷா பரந்யாஸமே ப்ரபத்தி சாஸ்த்ரமெல்லாவற்றிலும், ப்ரதாநமான விதேயமென்று ஸ்ரீவிஷ்ணுசித்த (எங்களாழ்வான்) வாதிஹம்ஸாம்புவாஹ (அப்புள்ளார்) வரதாசார்யாதிகள் (நடாதூர் அம்மாள் முதலானோர்) ஸங்க்ரஹித்தார்கள்."

என்று அருளிச்செய்கிறார்.

இப்படி ஸித்தோபாயத்தைப் பற்ற, ஸாத்யோபாயம் வ்யாஜமாத்ரமாய், இது ப்ரதாநமன்றிக்கே நிற்கிற நிலையைப் பற்ற ஸம்பந்த ஜ்ஞானமாத்ரம், ஸித்தோபாய ப்ரதிபத்தி மாத்ரம், அநிவாரணமாத்ரம், அநுமதி மாத்ரம், அசித்வ்யாவ்ருத்தி மாத்ரம், சைதந்ய க்ருத்யம், சித்த ஸமாதாநம், அதிகாரி விசேஷணம் என்று இப்புடைகளிலே அதிவாதம் பண்ணி-னார்கள். இவ்வந்யபரோக்தியைக் கொண்டு, இவைதானே அர்த்தம் என்று அறுதியிடவொண்ணாது. இவையெல்லாம்

'சரணம் வ்ரஜ' என்கிற விதிக்கு விருத்தங்களாம். அதிப்ரஸங்காதி தோஷங்களும் உண்டு. அது எங்ஙனேயென்னில்,

ஸம்பந்த ஜ்ஞானமாத்ரம் என்றாலும், ஸித்தோபாய ப்ரதிபத்தி என்றாலும், இது வாக்ய மாத்ர ஜந்யமாகில், விதி விஷயமாகமாட்டாது. அவிதேய ஜ்ஞானத்தாலே மோக்ஷம் என்பார்க்கு உபாஸநாதி விதி விரோதம் பாஷ்யாதி ஸித்தம். தத்வ ஜ்ஞானம் உடையவனுக்கு, பின்பு கர்த்தவ்யமான ஜ்ஞானாந்தரமாகில் ப்ரபத்தியினுடைய விதி, லக்ஷண, அனுஷ்டான வாக்கியங்கள் சொல்லுகிறபடியே இதின் ஸ்வரூபம் அங்கீகரிக்கவேணும். ஸித்தோபாய ஸ்வீகாரம் என்கிற பாசுரத்திற்கும், ஸித்தோபாயத்தை அறிந்து அது தனக்கு கார்யகரமாம்படி, பண்ணுகிற விதி ப்ராப்த ப்ரார்த்தநா பூர்வக பரந்யாஸ ரூப அதிகாரி க்ருத்யத்திலேயிறே தாத்பர்யம்.

ஈச்வரன் ப்ரஸாதநீயனாய் ப்ரதாநமான ஸித்தோபாயம். பக்தி, ப்ரபத்திகள் இரண்டும் ப்ரஸாதநங்களாய்க் கொண்டு ப்ரதாநமல்லாத ஸாத்யோபாயங்கள். இவை இரண்டத் தொன்றிலே யதாதிகாரம் நிலையாகக் கடவது"

என்று ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் சரம ஸ்லோகாதிகாரத்தில் அருளிச்செய்துள்ளார்.

பக்தியோகத்தை அனுஷ்டிப்பதற்கு அபேக்ஷிதமான ஜ்ஞானம், அனுஷ்டான சக்தி, ஜாதி யோக்யதை, கால விளம்பத்தை பொறுப்பவராய் இருக்கை, ஆகிய தன்மைகளை உடையவரே, ஸகிஞ்சனர்களே, பக்தியோகத்தை அனுஷ்டிப்பதற்குத் தகுதி உடையவராவார். இந்த நான்கு தன்மைகளில், ஒன்று குறைந்தாலும், அவர்கள் அகிஞ்சனர்களாய்க் கொண்டு ப்ரபத்தியை அனுஷ்டிப்பதற்கு தகுதியுடையவராவார் என்பதை ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ப்ரபத்தியோக்யாதிகாரத்தின் கடைசியில் உள்ள "பக்த்யாதௌ சக்தி அபாவ:" என்கிற ஸ்லோகத்தினால் அருளிச்செய்தார்.

இதனால், எம்பெருமானையே உபாயமாக அத்யவஸிக்கு மதுவே ப்ரபத்தியாகாது என்பதும் சாஸ்த்ர விஹிதமான ஸாத்யோபாய அனுஷ்டானமே ப்ரபத்தி என்பதும் இவ்வளவால் தேறிற்று.

இனி, ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ந்யாய ஸித்தாஞ்சனத்தில் அருளிச்செய்த ஸ்லோகத்தின் அர்த்தத்தைப் பார்ப்போம்.

இயம் கேவல லக்ஷ்மீச உபாயத்வ ப்ரத்யயாத்மிகா |
ஸ்வஹேதுத்வ தியம் ருந்தே கிம் புந: ஸஹகாரிணாம் ||

லக்ஷ்மி விசிஷ்டனான பகவான் ஒருவனே மோக்ஷத்திற்குக் காரணம் என்னும் இவ்வறிவு, தான் மோக்ஷத்திற்குக் காரணம் என்னும் அறிவைத் தடுக்கிறது. எனவே தனக்கு ஸஹகாரியான மற்றவை காரணம் என்னும் அறிவையும் நிச்சயம் தடுக்கும். அதாவது ப்ரபத்தி காரணம் என்னும் அறிவையும் அது தடுக்கிறது என்பது இந்த ஸ்லோகத்திற்கு அர்த்தம்.

இந்த ஸ்லோகத்தினால் ப்ரபத்தியின் அனுபாயத்வம் சொல்லப்படவில்லை என்பது இதற்கு அடுத்த ஸ்லோகத்தைப் பார்த்தால் புரியம். அந்த ஸ்லோகமாவது,-

ப்ராரப்த கர்ம அவதிக: மோக்ஷ இத்தம் உபாஸிது: |
த்ருப்தஸ்ய தேஹாவதிக: ஆர்த்தஸ்ய ஆர்த்தி அவதி: மத: ||

இந்த ஸ்லோகத்தில் பக்தனுக்கும், இருவகையான ப்ரபந்நருக்கும் (த்ருப்தன், ஆர்த்தன்) மோக்ஷம் கிடைக்கும் காலத்தை தெளிவுபடுத்துகிறார். உபாஸநம் செய்பவருக்கு ப்ராரப்த கர்ம அவஸாந சரீரத்தில் மோக்ஷம் கிடைக்கும் என்கிறார். இருவகையான ப்ரபந்நரில், த்ருப்த ப்ரபந்நனுக்கு மோக்ஷம் ப்ரபத்தி செய்து கொண்ட சரீரத்தை எல்லையாகக் கொண்டது என்றும், ஆர்த்தனுக்கு மோக்ஷம் அவர்களுடைய ஆர்த்தியை எல்லையாகக் கொண்டது என்றும் அருளிச்செய்கிறார். அதாவது அவர்கள்

குறிப்பிட்ட கால அளவே அவர்களுடைய மோக்ஷத்திற்கு எல்லை என்பது கருத்து.

த்ருப்தன், ஆர்த்தன் என்கிற இருவகை ப்ரபந்நர்களைப் பற்றி ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில், சரம ஸ்லோகாதிகாரத்தில்,

"ஜந்மாந்தராதி மாத்திரம் சோக நிமித்தமாய் ஏதேனும் ஒரு நாள் மோக்ஷம் பெறுவோம் என்று தேறி இருக்குமவன் த்ருப்தன். ப்ரபத்தி அனுஷ்டான அநந்தரம், க்ஷணமாத்ர விளம்பக்ஷமன் அல்லாதவன் ஆர்த்தப் ப்ரபந்தன்."

என்று அருளிச்செய்கிறார்.

இப்படி ந்யாய ஸித்தாஞ்சனத்தில், "ப்ராரப்த கர்ம அவதிக:" என்கிற ஸ்லோகத்தினால், ஸாத்யோபாய அனுஷ்டானத்தை ஸ்பஷ்டமாகக் காட்டியருளினார். இதற்கு கண்ணழிவு செய்யாமல் இதற்கு முந்தின, "இயம் கேவல லக்ஷ்மீச" என்கிற ஸ்லோகத்தின் பொருளை நிர்வஹிக்க வேண்டும். அவ்வாறு நிர்வஹிக்கும்போது, ஸித்தோபாயபூதனான சரண்யனோடு ஒக்கத் தன்னையும், தன்னால் அனுஷ்டிக்கப்படுகிற ப்ரபத்தியையும் உபாயமாக நினைத்தல் உசிதமன்று என்பதே தாத்பர்யமாகத் தேறும்.

ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் சரம ஸ்லோகாதிகாரத்தில், 'ஏக' சப்தத்திற்குப் பொருளை விளக்குமிடத்தில் அருளிச்செய்வதாவது,

"ஸ்வரக்ஷைக்கு உபயுக்தங்களான வசீகரணங்களை, சாஸ்த்ர நியுக்தனான தான் அனுஷ்டிக்கையாலே, ரக்ஷையிலே தனக்கும் கர்த்ருத்வம் தோற்றி, ஸித்தோபாயபூதனான சரண்யனோடொக்கத் தன்னையும் உபாயமாக எண்ணப்புக, இப்படி ப்ரஸக்தமான உபாய த்வித்வத்தைக் கழிக்கிறது

ஏகசப்தம். அது கழிந்தபடி என் என்னில் "கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்வாத்" என்கிறபடியே ஜீவனுக்குக் கர்த்ருத்வம் ப்ராமாணிகமேயாகிலும், இது பராதீநமாய், அல்பவிஷயமுமாய், ப்ரதிஹதி யோக்யமுமாய் இருக்கும். ஆகையால், இவன் தான் உபாய அனுஷ்டானம் பண்ணிற்றும், "வரத தவ கலு ப்ரஸாதாத்ருதே சரணமிதி வசோऽபி மே நோதியாத்" என்று சொல்லுகிறபடியே அவன் கடாக்ஷமடியாக வருகையாலே, அவனாலே ப்ரேரிதனாய், அவன் ஸஹகரியாதபோது, நீட்டமுடக்கமாட்டாதே, அவன் கொடுத்த கரண களேபரங்களைக் கொண்டு, அவன் காட்டின உபாயத்தை அவன் துணை செய்ய, அனுஷ்டித்து அவன் கொடுக்கப் போகிற பலத்துக்குச் சாதகம் போலே அண்ணாந்திருக்கிற இவனை ஸ்வாதீந-ஸர்வவிஷய-அப்ரதிஹத-கர்த்தருத்வம் உடையவனோடே துல்யமாக இரண்டாம் ஸித்தோபாயமாக எண்ணுகை விவேகியான முமுக்ஷுவுக்கு உசிதமன்று என்று ஏக சப்தத்தாலே சொல்லியாயிற்று."

"இக்கட்டளையிலே ஸாத்யோபாயமான ப்ரபத்தியையும் ஸித்தோபாயத்தோடு ஒரு கோவையாக எண்ணாமைக்காக, 'ஏகசப்தம்' என்றும் சொல்லுவார்கள். அது எங்ஙனேயென்னில், இப்ரபத்தியும் பக்தியோகம் போலே ப்ரஸாதநமாக விதிக்கப்பட்டிருந்ததேயாகிலும், ஸஹஜ காருண்யாதி விசிஷ்டனான ஸர்வேச்வரனுடைய காலுஷ்யசமந மாத்ரார்த்தமாய், ஸாக்ஷாத் பலத்துக்கு ஸஹஜ ஸாமர்த்ய காருண்ய விசிஷ்டனான இவன் நினைவே காரணமாம்படியாய், அவன் தானே அத்யந்த அகிஞ்சநனான ப்ரபந்நனுக்கு பரஸ்வீகாரத்தாலே பக்தியோகாதிகளான குருதர உபாயங்களின் நேரே நின்று இவ்வாநுகூல்ய ஸங்கல்பாதியுக்த ப்ரபத்திமாத்ர வ்யாஜ ஸாபேக்ஷனாய் வேறொன்றால் அபேக்ஷையில்லாமையால் நிரபேக்ஷ

உபாயத்வமே இந் ந்யாஸவித்யைக்கு வேத்யாகாரமாய்க் கொண்டு "த்வமேவ உபாயபூதோ மே பவ" என்று அபேக்ஷணீயனாய் இருக்க "என் உணர்வினுள்ளே இருத்தினேன் அதுவும் அவனதின்னருளே" என்றும் "இசைவித்து என்னை உன் தாளிணைக் கீழ் இருத்தும் அம்மானே" என்றும் சொல்லுகிறபடியே உபாயபூதனான அவன் செய்விக்கச் செய்கிற வ்யாஜ மாத்ரத்தை அவனோடொக்க உபாயமாக எண்ணுகை உசிதமன்று என்று ஏகசப்தத்துக்குத் தாத்பர்யம்"

என்றும் அருளிச்செய்தார்.

இந்த அர்த்த விசேஷத்தையே "ப்ராப்யஸ்யைவ ப்ராபகத்வம், ஸ்வப்ராதாந்யநிவாரணம், ப்ரபத்தே: வ்யாஜ மாத்ரத்வம்",

என்று ஏகசப்தத்தின் பொருளாக ஒரு ஸ்லோகத்தாலே ஸங்க்ரஹித்தருளுகிறார். மேலும் இந்தக் கருத்தை,

"சாதநமும் நற்பயனும் நானேயாவன்
சாதகனும் என்வயமாய் என்னைப் பற்றும்
சாதனமும் சரணநெறி அன்றுனக்கு"...

என்ற அதிகாரஸங்க்ரஹ பாசுரத்திலும் சரம ஸ்லோகத்தில் உள்ள ஏகசப்தத்திற்குப் பொருளாக அருளிச்செய்துள்ளார். ஆக இந்த ஸ்லோகத்திலும், பாசுரத்திலும் சொல்லப்படும் அர்த்த விசேஷமே ந்யாயஸித்தாஞ்சனத்திலுள்ள "இயம் கேவல லக்ஷ்மீச" என்கிற ஸ்லோகத்திற்கும் தாத்பர்யமாகக் கொள்ள வேண்டும்.

ஆக மேலே தெளிவிக்கப்பட்ட கருத்துக்களை நன்கு ஆராயும்போது சாஸ்த்ரஜ்ஞர்களில் தலைவரான ஸ்வாமி ஸ்ரீதேசிகன் சாஸ்த்ரகதி விருத்தமாக ப்ரபத்தி ஸாத்யோபாயமாக ஆகாது என்று நெஞ்சாலும் நினைக்கமாட்டார் என்பதன்றோ த்ருடீகரிக்கப்படுகிறது!

ஸ்ரீ:
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

# 4 நிரபேக்ஷ உபாயத்வம் ஸாத்யோபாயத்தை நிஷேதிக்கிறதா?

"தேசிக ஹ்ருதயம்"
கட்டுரையில் வெளிவந்த விஷயமாவது :

"சாஸ்த்ரங்களில் ஒன்று விதிக்கப்படுமானால் அது உபாயமாக (ஸாதநமாக) இருந்தே தீரும் என்பது பொதுவானதொரு கொள்கை. உபாயமாக மாட்டாததை சாஸ்த்ரம் எதற்காக விதிக்கும்? எப்போது விதி ஏற்படுகிறதோ அப்போது விதிக்கப்படுகின்றதின் உபாயத்வமும் கூடவே ஸித்திக்குமாதலால், சரமச்லோகத்தில் 'மாமேகம் சரணம் வ்ரஜ' என்று விதிக்கப்படுகிற ப்ரபத்திக்கு உபாயத்வம் அநிவார்யம் என்று பிறர் நினைக்கக் கூடியதுண்டு." இதனையும் ந்யாஸதிலகம் என்கிற க்ரந்தத்தில் தேசிகனே எடுத்துக்காட்டி சமாதானம் வகுத்துள்ளார்.

"ஹேதுர் வைதே விமர்சே:" என்கிற ச்லோகம் காண்க. இதன் கருத்தாவது, ப்ரபத்தியாவது விதிக்கப்பட்டிருப்பதனால் உபாயம் என்று சொல்ல வேண்டியிருந்தாலும் இங்கு அப்படிச் சொல்லவேண்டா. ஒவ்வொரு வித்யையிலும் எம்பெருமானுக்கு ஒவ்வொரு ரூபம் அறியக்கடவதாயிருக்கிற கணக்கிலே இந்த ப்ரபத்தி வித்யையில் இதர அநபேக்ஷ உபாயத்வம் (பிறிதொன்றை எதிர்பாராத உபாயத்வம்) அறியத்தக்க ரூபமாதலால் என்று இந்த ச்லோகத்தில் நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. ரஹஸ்யங்களிலும் இது உள்ளது" என்று கூறியுள்ளார்.

இதற்கு மறுப்பு பின்வருமாறு காட்டப்பெறுகிறது:

ந்யாஸதிலகத்தில் "ஹேதுர் வைதே விமர்சே:" என்கிற ஸ்லோகத்தின் பொருளை முதலில் அறிய வேண்டும். அந்த ஸ்லோகத்தின் பொருளாவது "திருவரங்க நகரப்பனே! விதியைப் பற்றி ஆராய்ச்சி செய்தால் பக்தியோகம் போல் மற்றொன்றாகிய ப்ரபத்தியும் பலனுக்கு சாதனமாகும். ஆனால் அத்தை அனுஷ்டிக்கும்போது நினைக்க வேண்டிய உன் தனிப்பட்ட குணமாவது பக்தியோகத்தில் ஸத்வித்யை, தஹ்ரவித்யை முதலான வித்யைகளுக்கு அனுகுணமாக பலவகைப் பட்டதாயிருக்கும். இந்த ப்ரபத்தி வித்யையிலோ, அந்ய அநபேக்ஷா உபாயதா வேறொன்றையும் அபேக்ஷிக்காத உபாயமாய் நிற்றலே அநுஸந்திக்கப்படவேண்டிய உன் தனிப்பட்ட குணமாகும்" என்று அருளிச்செய்கிறார்.

ப்ரபத்தி வித்யையில் அநுஸந்திக்கப்படவேண்டிய நிரபேக்ஷ உபாயத்வமாகிற குணவிசேஷத்தின் விளக்கத்தை, ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் த்வயாதிகாரத்தில் அருளிச்செய்கிறார்.

**"என் தலையில் உபாயாந்தரத்தைச் சுமத்தாதே. அவற்றைச் சுமந்தால் மேல்வரும் அபிமதமெல்லாம் தருகை ஸமர்த்த காருணிகனான உனக்கே பரமாக ஏறிட்டுக் கொள்ள வேணும்"**

என்கிற அம்சத்தை நிஷ்கர்ஷித்து நிக்ஷேபத்தை அங்கி என்று சொல்கிறது என்று ஆரம்பித்து, இவ் உபாயத்வம் ந்யாஸ வித்யைக்கு விசேஷித்து வேத்யாகாரம் என்று அருளிச்செய்கிறார்.

மேலும் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் சரம ஸ்லோகாதிகாரத்தில்

**"இவ்வித்யைக்கு விசேஷித்து வேத்யாகாரம் நிரபேக்ஷ உபாயத்வம்"**

என்பதை விவரித்து அருளிச்செய்கிறார்.

அதாவது

"எம்பெருமான் தானே அத்யந்த அகிஞ்சனனான ப்ரபந்நனுக்கு பரஸ்வீகாரத்தாலே பக்தியோகாதிகளான குருதர உபாயங்களின் நேரே நின்று இவ்வாநுகூல்ய ஸங்கல்பாதியுக்த ப்ரபத்திமாத்ர வ்யாஜ ஸாபேக்ஷனாய் வேறொன்றால் அபேக்ஷையில்லாமல் நிரபேக்ஷ உபாயத்வமே இந்ந்யாஸவித்யைக்கு வேத்யா காரமாய்க் கொண்டு"

என்று அருளிச்செய்வதால் "ப்ரபத்தி வித்யையில் அந்ய அநபேக்ஷ உபாயத்வம் அறியத்தக்க ரூபம்" என்று ந்யாஸ திலகத்தில் அருளிச் செய்தது அகிஞ்சனனிடத்தில் பக்தியோகத்தை அபேக்ஷிக்காமல் உபாயாந்தர ஸ்தாநத்தில் (பக்தியோக ஸ்தாநத்தில்) எம்பெருமான் நின்று உபாயமாவதைக் கூறுகிறதே தவிர, சாஸ்த்ர விஹிதமான ப்ரபத்திக்கு ஸாத்யோபாயத்வத்தை இது நிஷேதிக்கவில்லை என்றதாயிற்று.

ஸ்ரீ:
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

# 5 த்வய உச்சாரண மாத்திரம் ப்ரபத்தியாகுமா?

"தேசிக ஹ்ருதயம்"
கட்டுரையில் வெளிவந்த விஷயமாவது :

ஸதாசார்ய ஸமாச்ருதர்களாய் த்வய உச்சாரண அநுச்சாரணத்தாலே ப்ரபத்தி ஸித்தியையும் பெறுகிறோம். அது தனக்கு உபாயத்வம் உண்டென்று சொல்லுமவர்களை நிச்சயமாகக் கண்டிப்பவர் நிகமாந்த மஹாகுருவே ஆவர். மேலே உதாஹரித்த "நிஜகர்மாதி பக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித: உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாமபீ:" என்ற கீதார்த்தஸங்க்ரஹ ச்லோக வ்யாக்கியானத்திற்கு, ரக்ஷையில் தேசிகன் அருளிச்செய்வது காணீர். "ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தர பாவி பல ஸாதநத்வ அனுபபத்தி தர்சனாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயதா புத்திரபி ஸ்யாத் இதி பாவ: அந்தத: தைஸ்தை: ஆராதிதோ பகவானேவஹி ஸர்வத்ர உபாய:" என்று அருளிச்செய்கிறார்.

"இந்த ஒரு ஸ்ரீஸூக்தி போதும் இவ்விஷயத்தில் தெளிவு பெற. "உபபத்தேஸ்ச" (3-2-34) "பலமத உபபத்தே:" (3-2-27) என்கிற ப்ரஹ்மஸூத்ரங்களின் ஸ்ரீபாஷ்யத்தில் ஸ்வாமி விபுலமாக அருளிச்செய்திருக்கும் ஸ்ரீஸூக்திகளின் ஸாரமாகவே மேலே உதாஹரித்த கீதார்த்தஸங்க்ரஹ ரக்ஷாஸூக்தி அமைந்தது" என்று அந்தக் கட்டுரையில் கூறியுள்ளார்.

இதற்கு மறுப்பு பின்வருமாறு காட்டப்பெறுகிறது:

ஸ்வாமி ஸ்ரீதேசிகன், ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸாங்கப்ரபதநாதிகாரத்தில் அங்கங்களுடன் ப்ரபத்தியை அனுஷ்டிக்கும் முறையை அருளிச்செய்கிறார்.

"இதில் ஸாங்க அனுஷ்டானமாயற்றது கர்த்ருத்வ த்யாக மமதா த்யாக, பல த்யாக, பல உபாயத்வ த்யாக பூர்வகமான ஆநுகூல்யஸங்கல்பாதி அர்த்தாநுஸந்தானத்தோடே குரு-பரம்பரா உபஸத்தி பூர்வக த்வய வசந முகத்தாலே ஸ்வரூப பல ந்யாஸ கர்ப்பமான ஆத்மரக்ஷா பரஸமர்ப்பணம் பண்ணுகை"

என்று இப்படி அங்கங்களோடு கூடிய அங்கி அனுஷ்டானத்தை அருளிச் செய்தார். இந்த ரீதியில் தென்னாசார்ய ஸம்ப்ர-தாயத்தவர்கள் ப்ரபத்தி அனுஷ்டானத்தை செய்கிறார்களா என்றால், இல்லையே. ஸதாசார்ய ஸமாச்ருதர்களாய் வெறும் த்வய உச்சாரண அனுச்சாரணம் மட்டுமே ப்ரபத்தியாகாது என்பதை முதலில் ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீஸூக்தியினால் தெளிய வேண்டும். ப்ரபத்திக்கு உபாயத்வம் உண்டென்று சொல்லுமவர்களை முக்கியமாக கண்டிப்பவர் நிகமாந்த மஹாகுருவேயாவார் என்று கூறியிருப்பது பொருத்தமற்றது. ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸித்தோபாய சோதநாதிகாரத்தில் அருளிச்செய்வதாவது

ஸமஸ்த புருஷார்த்தாநாம் ஸாதகஸ்ய தயாநிதே: |<br>
ஸ்ரீமத: பூர்வ ஸித்தத்வாத் ஸித்தோபாயம் இமம் விது: ||<br>
பக்தி ப்ரபத்தி ப்ரமுகம் தத் வசீகார காரணம் |<br>
தத்தத் பலார்த்தி ஸாத்யத்வாத் ஸாத்யோபாயம் விதுர்புதா:" ||

எல்லாப் புருஷார்த்தங்களையும் கொடுப்பதில் சக்தியுள்ள கருணைக்கு இருப்பிடமான ச்ரிய:பதி ப்ரபத்தி

செய்வதற்கும் முன்பே இருப்பதாலே இந்த ஸ்ரீமந் நாராயணனை ஸித்தோபாயமாக வித்வான்கள் அறிகிறார்கள். பக்தி ப்ரபத்தி முதலியவைகளை, அந்த ஸித்தோபாயமான எம்பெருமானை வசீகரிப்பதற்குக் காரணமாய் இருந்துகொண்டு, அந்தந்த பலன்களை அபேக்ஷிப்பவர்களால் செய்யப்பட வேண்டி-யிருப்பதால் ஸாத்யோபாயமாக வித்வான்கள் அறிகிறார்கள் என்று அருளிச்செய்துள்ளார்.

"சதுர்விதா பஜந்தே மாம்" என்கிறபடியே உபாஸநம் யாதொருபடி சதுர்வித பலத்துக்கும் ஸாதநமாய் இருக்கிறதோ, அப்படியே ப்ரபத்தியும் இச்சதுர்வித பலத்துக்கும் ஸாதநமாகவே இருக்கிறது என்று மஹரிஷிகள் அறுதியிட்டிருப்பதை ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் பராசரமஹரிஷி கீழ்வரும் ஸ்லோகத்தில் அருளிச்செய்கிறார்.

"தாவதார்த்தி: ததா வாஞ்சா தாவந்மோஹஸ் ததா அஸுகம் |
யாவந்நயாதி சரணம் த்வாமசேஷ அகநாசனம்" ||

"எம்பெருமானே! எது வரையில் ஸர்வபாபங்களையும் போக்கவல்ல உன்னிடத்தில் ப்ரபத்தி பண்ணவில்லையோ அதுவரையில் தான் மனிதனுக்கு தான் இழந்த ஐஸ்வர்யத்தை மறுபடி பெறவேண்டும் என்ற கவலையும், அதுவரையில் தான் புதிய ஐஸ்வர்யம் கிடைக்கவேண்டும் என்ற ஆசையும், அதுவரையில் தான் சரீரத்தைவிட வேறான ஆத்மாவை அனுபவிக்காமல் இருப்பதும், அதுவரையில் தான் ஸம்ஸார துக்கமும், பரமாத்ம அனுபவம் இல்லாமையும் இருக்கும் என்பது இந்த ஸ்லோகத்தின் பொருள். அதாவது ப்ரபத்தி செய்துவிட்டால் அபேக்ஷித பல ஸித்தியுண்டு என்று தேறுகிறது. ஆக பக்தியோகம் போல், ப்ரபத்தியும் இச்சதுர்வித பலத்துக்கும் ஸாதநமாகவிறே மஹரிஷிகள் அறுதியிடுவது என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் பராசர மஹரிஷி அருளிச் செய்ததை உதாஹரித்து ஸ்ரீமத்

ரஹஸ்யத்ரயஸாரத்தில் அதிகாரிவிபாகாதிகாரத்தில் ஸ்வாமி ஸ்ரீதேசிகன் அருளிச் செய்தார். இதனால் பக்தியோகத்திற்கும் ப்ரபத்திக்கும் ஸாத்யோபாயத்வத்தை ஸ்வாமி ஸ்ரீதேசிகன் இசைந்தாராயிற்று.

"தத்வஜ்ஞானத்தாலே மோக்ஷம் என்கிற இதுவும் ஓர் உபாய அனுஷ்டானத்தை முன்னிட்டு என்னுமிடம் 'பஜஸ்வமாம்', 'மாமேகம் சரணம் வ்ரஜ' இத்யாதி விதி பல ப்ராப்தம்"

என்று பக்தி யோகத்திற்கும், ப்ரபத்திக்கும் ஸாத்யோபாயத்வத்தை ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸாத்யோபாய சோதநாதிகாரத்தில், ஸ்வாமி ஸ்ரீதேசிகன் அருளிச்செய்தார். மேலும்

"சேஷபூதனுமாய் பரதந்த்ரனுமான இவனுக்கு யதாதிகாரம் ஸ்வரக்ஷணார்த்த வ்யாபாரம் பண்ண குறையில்லை"

என்றும் ஸாத்யோபாய சோதநாதிகாரத்தில் அருளிச்செய்தார். மேலும்

"முமுக்ஷுவுக்கு விஹிதங்களாகையாலே பக்தி ப்ரபத்திகள் இரண்டும் யதாதிகாரம் பரிக்ராஹ்யங்கள்"

என்றும் ஸாத்யோபாய சோதநாதிகாரத்தில் அருளிச்செய்தார்.

இதற்கு முன் அதிகாரத்தில்

ஓர் அதிகாரி விசேஷத்திற்குக் கர்த்தவ்யமாக "மாமேகம் சரணம் வ்ரஜ" என்று விதிக்கப்படுகிற ப்ரபத்தியை அதிகாரி விசேஷணம் என்று சிலர் சொன்னவிடம் அதிகாரி விசேஷணத்திற்குச் சொல்லும் லக்ஷணத்தோடு சேராமையால் அதிவாதம் என்றும், "இவன் தானே நம்மை ஓர் உபாயத்திலே வ்யாபரிப்பித்து அந்த வ்யாபாரத்தாலே ப்ரஸந்நனாய் ரக்ஷிக்கிறான் என்று இருக்கப் பிராப்தம்"

என்று ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸித்தோபாய சோதநா-திகாரத்தில் ஸ்வாமி ஸ்ரீதேசிகன் அருளிச்செய்தார்.

ஆக இவ்வளவால் பக்தியோகத்திற்கும் ப்ரபத்திக்கும் ஸாத்யோபாயத்வம் உண்டு என்பதையே ஸ்வாமி ஸ்ரீதேசிகன் நிலைநாட்டியுள்ளார் என்பது இதனால் அறிவிக்கப் பட்டதாகிறது.

இனி "உபபத்தேஸ்ச" (3-2-34) 'பலமத உபபத்தே:' 3-2-37) என்கிற ப்ரஹ்மஸூத்ரங்களின் வ்யாக்யானமான ஸ்ரீபாஷ்யத்தில் பகவத் ராமாநுஜர் அருளிச்செய்திருக்கும் விஷயங்களைப் பார்ப்போம்.

இந்த இரண்டு ஸூத்ரங்களும் 'ஸாதநாத்யாயம்' என்கிற மூன்றாம் அத்யாயத்தில் இரண்டாம் பாதத்தில் இடம் பெற்றுள்ளன. இந்த இரண்டு ஸூத்ரங்களில் "உபபத்தேஸ்ச" என்கிற ஸூத்ரம் பராதிகரணத்தில் உள்ளது. ப்ராப்யனான பரமபுருஷனே தன்னை அடைவதற்குத் தானே உபாயமாகிறான் என்பது உபபந்நமே என்பது ஸூத்ரார்த்தம். இந்த ஸூத்ரத்தில் ஸ்ரீபாஷ்யகாரர் ப்ராப்யனான பரமபுருஷன் தன்னை அடைவதற்குத் தானே உபாயமாகிறான் என்பதை ச்ருதி, ஸ்ம்ருதி வாக்கியங்களைக் கொண்டு விளக்கியருளுகிறார்.

"நாயமாத்மா ப்ரவசநேந லப்ய: நமேதயா ந பஹுநா ச்ருதேந |
யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய: தஸ்யைஷ ஆத்மா
விவ்ருணுதே தநூம் ஸ்வாம்" ||

என்பது கடோபநிஷத் வாக்யம். அநந்யோபாயத்தைக் கூறுகிற இந்த ச்ருதி வாக்யத்தின் அர்த்தத்தை ஸ்ரீபாஷ்யகாரர் ஸ்ரீபாஷ்யத்தில் லகு ஸித்தாந்தத்தில் கீழ்வருமாறு விவரித்தருளியுள்ளார்.

"ஏவம் ப்ரத்யக்ஷதாபந்நம் அபவர்க்க ஸாதநபூதாம் ஸ்ம்ருதிம் விசிநஷ்டி – நாயமாத்மா ப்ரவசநேந லப்ய: ந மேதயா நபஹுநா

ச்ருதேந, யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய: தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம் இதி – அநேந கேவல ச்ரவண மநந நிதித்யாஸநாநாம் ஆத்ம ப்ராப்தி அனுபாயத்வம் உக்த்வா, "யமேவைஷ ஆத்மா வ்ருணுதே தேநைவ லப்ய:"இத்யுக்தம். ப்ரியதம ஏவஹி வரணீயோ பவதீ |

யஸ்ய அயம் நிரதிசய ப்ரிய: ஸ ஏவ அஸ்ய ப்ரியதமோ பவதி |

யதா அயம் ப்ரியதம ஆத்மாநம் ப்ராப்நோதி, ததா பகவான் ஸ்வயமேவ ப்ரயதத இதி பகவதைவ உக்தம்–

தேஷாம் ஸதத யுக்தாநாம் பஜதாம் ப்ரீதி பூர்வகம் |

ததாமி புத்தியோகம் தம் யேந மாம் உபயாந்தி தே ||
(பகவத்கீதை 10-10)

இதி,

ப்ரியோஹி ஜ்ஞாநி ந: அத்யர்த்தம் அஹம் ஸச மம ப்ரிய: (பகவத் கீதை 7-17) இதி ச |

அத: ஸாக்ஷாத்கார ரூபா ஸ்ம்ருதி: ஸ்மர்யமாண அத்யர்த்த ப்ரியத்வேந ஸ்வயமபி அத்யர்த்த ப்ரியா யஸ்ய, ஸ ஏவ பரேண ஆத்மநா வரணீயோபவதி இதி, தேநைவ லப்யதே பர ஆத்மா இத்யுக்தம் பவதி |

என்று அருளிச் செய்துள்ளார். இதன் அர்த்தமாவது-

தர்சந ரூபத்வமானது ப்ரத்யக்ஷதாபத்தியை அடைந்திருக்கிறதும் மோக்ஷத்திற்கு ஸாதநபூதையாக இருக்கிறதுமான ஸ்ம்ருதியை வேதம் விசேஷித்துச் சொல்கிறது. இந்த ஆத்மா மநநத்தினாலும், நிதித்யாஸனத்தினாலும், பல தடவை ச்ரவணம் பண்ணுவதாலும், அடையத்தக்கவன் அல்ல. எந்த உபாஸகனை பரமாத்மா வரிக்கிறானோ அவனாலேயே அடையத் தக்கவன். அவனுக்கு

இந்த ஆத்மா (பரமாத்மா) தனது திருமேனியை காட்டுகிறான் என்று வேதம் கூறுகிறது. இதனால் ப்ரீதியில்லாத கேவல ச்ரவண மநந, நிதித்யாஸனங்களுக்கு பரமாத்ம ப்ராப்தி விஷயத்தில் அனுபாயத்வத்தைச் சொல்லிவிட்டு, இந்த ஆத்மா (பரமாத்மா) எவனைத் தானே வரிக்கிறானோ அவனாலேயே அடையத்தக்கவன் என்று சொல்லப்பட்டிருப்பது அறியப்படுகிறது. 'ப்ரியதமனே' அன்றோ வரிக்கத் தக்கவன் ஆகிறான். எவனுக்கு பகவான் நிரதிசய ப்ரீதி விஷயமாக இருக்கிறானோ அவனே பகவானுக்கு ப்ரியதமனாகிறான். ப்ரியதமனான இவன் எப்படி பரமாத்மாவை அடைவானோ அவ்வாறு, பகவான் தானே முயற்சி செய்கிறான் என்று பகவானாலேயே சொல்லப்பட்டிருக்கிறது.

"என்னுடனேயே எப்பொழுதும் சேர்ந்திருக்க வேண்டுமென்று விரும்புகிறவர்களும் ப்ரீதி பூர்வமாய் என்னை பஜிப்பவர்களுமான அவர்கள் என்னை எதனால் அடைவார்களோ அந்த புத்தி யோகத்தை நான் கொடுக்கிறேன்" என்றும் "ஞானிக்கு நான் அத்யந்த ப்ரியன் அவனும் எனக்கு அத்யந்த ப்ரியன்'' ஆகையால் ஸ்மரிக்கப்படுகிற வஸ்து அதிக ப்ரியமானதால் ஸாக்ஷாத்கார ரூப ஸ்ம்ருதி தானும் எவனுக்கு இருக்கிறதோ அவனே பரமாத்மாவினால் வரிக்கத்தக்கவன் ஆகிறான் என்றும் "அவனாலேயே பரமாத்மா அடையப்படுகிறான்" என்றும் சொல்லப்பட்டதாகிறது. இவ்வாறு ஸ்ரீபாஷ்யகாரர் ஸ்ரீபாஷ்யத்தில் லகு ஸித்தாந்தத்தில் "நாயமாத்மா ப்ரவசநேந லப்ய:...... தநூம் ஸ்வாம்" என்கிற மந்திரத்தின் அர்த்தத்தை "ப்ரியதம ஏவஹி வரணீயோ பவதி, யஸ்ய அயம் நிரதிசய ப்ரிய: ஸ ஏவ அஸ்ய ப்ரியதமோ பவதி" என்கிற ஸ்ரீஸூக்திகளால் விவரித்தருளினார்.

இவற்றின் அர்த்தத்தை ச்ருதப்ரகாசிகை மிகத் தெளிவாகக் காட்டுகிறது.

"யஸ்ய உபாஸகஸ்ய அயம் பரமாத்மா நிரதிசய ப்ரீதி விஷய: ஸ ஏவ அஸ்ய பரமாத்மந: நிரதிசய ப்ரீதி விஷயோ பவதி சேதநத்வே ஸதி பகவதா வரணீயத்வம் பகவதி நிரதிசய ப்ரீதி மத ஏவ" என்று.

இந்த வாக்கியத்தின் பொருளாவது, எந்த உபாஸகனுக்கு எம்பெருமானிடம் ஒப்புயர்வற்ற ப்ரீதி (பக்தி) உள்ளதோ அவனிடம் தான், எம்பெருமானுக்கும் ஒப்புயர்வற்ற ப்ரீதி (அனுக்ரஹம்) இருக்கும். ஆக சேதனனான ஒருவன் பரமாத்மாவினால், விரும்பப்பட வேண்டுமானால், அவனுக்கு எம்பெருமானிடம் மிகுந்த பக்தி கட்டாயம் இருக்க வேண்டும். எம்பெருமானிடம் பக்தி இல்லாத ஒருவனை பகவான் ஒருக்காலும் வரிக்கமாட்டான் என்கிறது ச்ருதப்ரகாசிகை. ஆக, சேதனராய் இருப்பவர்களுக்குள் எவன் எம்பெருமானை விரும்புகிறானோ அவனைத்தான் எம்பெருமானும் விரும்புகிறான் என்றதாயிற்று.

இவற்றை அனுஸரித்து இங்கு உபநிஷத் பாஷ்யகாரர்

"ததஸ்ச பகவத் விஷயிணீ உபாஸகஸ்ய ப்ரீதி: பகவத: உபாஸகே ப்ரீதிம் உத்பாத்ய தத் ப்ராப்தி ஹேது: பவதி இத்யர்த்த:"

என்று விவரிக்கிறார். அதாவது, உபாஸகன் எம்பெருமான் விஷயத்தில் செய்யும் ப்ரீதி ரூபையான பக்தியானது எம்பெருமானுக்கு உபாஸகனிடத்தில் அனுக்ரஹ ஸங்கல்பத்தை (ப்ரீதியை) உண்டு பண்ணி அதன் மூலம் அந்த உபாஸகன் பரமாத்மாவை அடைவதற்கும் ஹேதுவாகிறது என்று கருத்து. அதாவது ஜீவன் எம்பெருமானிடம் பக்தி பண்ணுகிறான். அதனால் பக்தி பண்ணும் அந்த ஜீவனை எம்பெருமான் வரிக்கிறான் (விரும்புகிறான்). அதனால் அந்த ஜீவன் அந்த எம்பெருமானை அடைகிறான் என்பது இந்த உபநிஷத்பாஷ்ய வாக்கியங்களின் பொருள். 'வரிக்கிறான்' என்றால் உபாஸகனான இந்த ஜீவன்

என்னை அடையட்டும் என்று தடையற்ற ஸங்கல்பத்தைப் பண்ணுகிறான் என்று பொருள். "அத்ர வரணம் மாம் அயம் ப்ராப்நுயாத் இதி அமோகஸ்ய ஸங்கல்ப:" என்று கூறுகிறது தத்வடீகை.

ஆக இதனால், "யமேவைஷ வ்ருணுதே" என்கிற ச்ருதியானது எந்த உபாஸகனை பகவான் வரிக்கிறானோ அவனாலேயே அடையத்தக்கவன் என்கிற அர்த்தத்தையே காட்டுகிறது என்பது நிஸ்சிதமாகிறது.

"பலம் அத: உபபத்தே:" என்கிற ஸூத்ரம் பலாதிகரணத்தில் உள்ளது. இனி இந்த ஸூத்ரத்திற்கு ஸ்ரீபாஷ்யத்தில் ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்த வ்யாக்யானத்தைப் பார்ப்போம்.

கர்ம உபாஸநாதிகளால் ஆராதிக்கப்பட்ட பரம புருஷனே,

ஸ்வர்க அபவர்க (மோக்ஷ) பலன்களைக் கொடுக்கிறான். இவ்விதம் எதனால் சொல்லப்படுகிறது என்னில்,

'உபபத்தே:' -

**"ஸ ஏவ ஹி ஸர்வஜ்ஞ: ஸர்வசக்தி: மஹோதார: யாக தான ஹோமாதிபி: உபாஸநேந ச ஆராதித: ஐஹிக ஆமுஷ்மிக போக ஜாதம், ஸ்வஸ்வரூப அவாப்தி ரூபம் அபவர்கம் ச தாதுமீஷ்டே, நஹி அசேதநம் கர்ம க்ஷணத்வம்ஸி காலாந்தர பாவி பலஸாதநம் பவிதுமர்ஹதி"**

என்று விளக்குகிறார். அதாவது, பரமபுருஷனே ஸர்வஜ்ஞன் ஸர்வ சக்தன் மஹோதாரன் அவன் யாக தாந ஹோமாதிகளாலும் உபாஸநத்தினாலும் ஆராதிக்கப்பட்டவனாய் ஐஹிக ஆமுஷ்மிக போகங்களையும் ஸ்வஸ்வரூப அவாப்தி ரூப மோக்ஷத்தையும் கொடுப்பதற்கு ஸமர்த்தனாகிறான். அசேதநமாயும் க்ஷணத்-வம்ஸியாயும் உள்ள கர்மாவானது காலாந்தரத்தில் வரக்கூடிய பலத்திற்கு ஸாதநமாக ஆகாது என்பது ஸூத்ரார்த்தம்.

இந்த பலாதிகணரத்தில் "பலம் அத: உபபத்தே:" என்கிற ஸித்தாந்த ஸூத்ரத்தை முதலில் அருளிச்செய்து அதன் பிறகு ''தர்மம் ஜைமிநி: அத ஏவ'' என்கிற பூர்வபக்ஷ ஸூத்ரத்தை அருளிச்செய்கிறார் ஸூத்ரகாரர். இதற்கு விளக்கத்தை ஸ்ரீபாஷ்யகாரர், "அத ஏவ உபபத்தே: சாஸ்த்ராச்ச யாக தாந ஹோம உபாஸந ரூப தர்மமேவ பலப்ரதம் ஜைமிநி: ஆசார்யோ மந்யதே" என்று அருளிச்செய்கிறார். 'தர்மம்' என்ற பதத்தால் யாக தாந ஹோம உபாஸநாதி கர்மாவே பலனைக் கொடுக்கிறது என்று ஜைமிநி மஹரிஷி சொல்லுகிறார். ஏனென்றால் 'அதஏவ' - உபபத்தியைக் கொண்டும் சாஸ்த்ரத்தைக் கொண்டும், இவ்விதம் நிர்ணயிக்கவேண்டி இருக்கிறது என்பது பூர்வபக்ஷ ஸூத்ரார்த்தம்.

இதனை அடுத்து "பூர்வம் து பாதராயணோ ஹேது வ்யபதேசாத்" என்பது ஸித்தாந்த ஸூத்ரம். அவ்விடத்தில்,

> "து சப்த: பக்ஷ வ்யாவ்ருத்யர்த்த: | பூர்வோக்தம் பரமபுருஷஸ்யைவ பலப்ரதத்வம் பகவான் பாதராயணோ மந்யதே"

என்று காட்டுகிறார் ஸ்ரீபாஷ்யகாரர். 'து' சப்தமானது பூர்வ பக்ஷத்தை வ்யாவ்ருத்திருக்கிறது. பலம் அத: உபபத்தே: என்கிற முதல் ஸூத்ரத்தில் சொன்னபடி பலனைக் கொடுப்பது பரமபுருஷனுக்கே ஸம்பவிக்கும் என்று பாதராயணர் (வ்யாஸர்) திருவுள்ளம் பற்றுகிறார். ஏனென்றால் பரமபுருஷனே பலனளிப்பதாக வேதாந்தங்களில் சொல்லியிருப்பதால் என்பது ஸூத்ரார்த்தம்.

இந்த ஸித்தாந்த ஸூத்ர வ்யாக்யானத்தின் முடிவில் ஸ்ரீபாஷ்யகாரர் ஸ்ரீபாஷ்யத்தில் அருளிச்செய்வதாவது -

> **"வேதாந்தேஷு அதிபதி த ஸகல இதர ப்ரமாண ஸம்பாவநா பூமிம் நிரஸ்த ஸமஸ்த அவித்யாதி தோஷகந்தம் ஸ்வாபாவிக அநவதிகாதிசய அபரிமித உதார குண ஸாகரம் புருஷோத்தமம்**

ப்ரதிபாத்ய, தத் ஆராதந ரூபாணிச யாக தாந ஹோமாத்ம காநி, ஸ்துதி நமஸ்கார, கீர்த்தந, அர்ச்சந த்யாநாநி ச தத் ஆராதநாநி ஆராதிதாத் பரஸ்மாத் புருஷாத் போக அபவர்க ரூபம் பலம் ச வதந்தி இதி ஸர்வம் ஸமஞ்சஸம்.''

உபநிஷத்துக்கள், சப்த இதர ப்ரமாணங்களால் அறிய முடியாதவனாயும், அவித்யாதி தோஷ கந்த ரஹிதனாயும் ஸ்வாபாவிகமாகவே அநவதிகாதிசய அபரிமித உதார குண ஸாகரனாயும், இருக்கிற புருஷோத்தமனை ப்ரதிபாதித்து அவனது ஆராதந ரூபமான யாக தாந ஹோமாதிகளையும், ஸ்துதி நமஸ்கார, கீர்த்தந அர்ச்சந த்யானங்களையும் அவனது ஆராதநமாகச் சொல்லி, இவைகளால் ஆராதிக்கப்பட்ட பரமபுருஷனிடமிருந்து போகம் - ஸ்வர்கம், அபவர்கம் - மோக்ஷம் ஆகிய பலன்களையும் அடைவதாக உபநிஷத்துக்கள் சொல்லுகின்றன என்று ஸ்ரீபாஷ்யத்தில் ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்தார்.

இவ்வளவால் எம்பெருமான் சாஸ்த்ர விஹிதமான ஸாத்யோபாய அனுஷ்டானத்தால் ஆராதிக்கப்பட்டவனாய்க் கொண்டே பலப்ரதனாய்க் கொண்டு ஸித்தோபாயமாகிறான் என்பது ஸ்ரீபாஷ்யகாரரால் அருளிச்செய்யப்பட்டதாகிறது.

ஸ்ரீபாஷ்யத்தில் மூன்றாம் அத்யாயமான ஸாதநாத்யாயத்தில், மூன்றாம் பாதமான குணோபஸம்ஹாரபாதம், நான்காம் பாதமான அங்க பாதம், ஆகியவற்றில், ஸ்ரீபாஷ்யகாரர் ஸாதித்தருளிய விஷயங்களை ஸ்ரீபாஷ்யத்தைக் கொண்டு நன்கு ஸேவித்து கலக்கமற தெளிவாக அறிந்தால், ஸித்தோபாயபூதனான எம்பெருமானை வசீகரிப்பதற்கு ஸாத்யோபாய அனுஷ்டானம் அவசியம் வேண்டுமென்பதை எவ்வளவு வலியுறுத்திக் கூறுகிறார் என்கிற உண்மை புலப்படும்.

ஸ்ரீபாஷ்யகாரர், ஸ்ரீபாஷ்யத்தில் பலாதிகரணத்தில் "பலம் அத: உபபத்தே:" என்கிற ஸூத்ரத்திற்கு வ்யாக்யானமாக அருளிச் செய்த ஸ்ரீஸூக்தியைக் கொண்டே ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸாத்யோபாய சோதநாதிகாரத்தில் முதல் ஸ்லோகத்தை அருளிச்செய்துள்ளார்.

யதாதிகரணம் ப்ரபு: யஜ்ஞ தாந ஹோமார்ச்சநா பரந்யஸந
பாவநா ப்ரப்ருதிபி: ஸமாராதித: |
பலம் திசதி தேஹிநாம் இதி ஹி ஸம்ப்ரதாய ஸ்திதி: ச்ருதி
ஸ்ம்ருதி குரூக்திபி: நயவதீபி: ஆபாதி ந: ||

இந்த ஸ்லோகத்தில், பலத்தை அளிப்பதில் ஸமர்த்தனான பகவான், அவரவர்கள் அதிகாரத்திற்குத் தகுந்தபடி செய்யப்படுகிற யாகம், தாநம், ஹோமம், அர்ச்சனை, ப்ரபத்தி, பக்தியோகம் முதலியவைகளாலே, நன்கு ஆராதிக்கப்பட்டவனாய் ஜீவர்களுக்கு பலனைக் கொடுக்கிறான். இப்படி ப்ரஸித்தமான ஸம்ப்ரதாயத்தின் நிலையானது நல்ல ந்யாயங்களோடு கூடின வேதம், ஸ்ம்ருதி, ஆசார்ய ஸ்ரீஸூக்தி ஆகிய இவைகளால் நமக்கு நன்கு விளங்குகிறது என்று அருளிச்செய்கிறார்.

இதே அதிகாரத்திலேயே இதற்கு மேல்

**"முமுக்ஷுவினுடைய ஸர்வ அநிஷ்ட நிவ்ருத்தி பூர்வகமாய் பரிபூர்ண கைங்கர்ய பர்யந்தமான பலபரம்பரையெல்லாம் ஸித்தோபாயகார்யம் என்றும் ப்ரஸாதநமான ஸாத்யோபாயம் அடியாக வருகிறதென்றும் சொல்லுகிற ப்ரமாணங்கள் இரண்டும் ஸுஸங்கதங்கள்"**

என்றும் அருளிச்செய்துள்ளார்.

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் சரம ஸ்லோகாதிகாரத்தில்

"உபாய பூதனான அவன் செய்விக்கச் செய்கிற வ்யாஜ மாத்ரத்தை அவனோடொக்க உபாயமாக எண்ணுகை உசிதமன்று என்று 'ஏக' சப்தத்திற்குத் தாத்பர்யம்"

என்று அருளிச்செய்தார்.

இந்த அதிகாரத்திலேயே இதற்கு மேல் "ஈச்வரன் ப்ரஸாதநீயனாய் ப்ரதாநமான ஸித்தோபாயம். பக்தி ப்ரபத்திகள் இரண்டும் ப்ரஸாதநங்களாய்க் கொண்டு ப்ரதாநமல்லாத ஸாத்யோபாயங்கள். இவை இரண்டத்தொன்றிலே யதாதிகாரம் நிலையாகக் கடவது" என்றும் அருளிச்செய்துள்ளார்.

இப்படி ஸ்வாமி ஸ்ரீதேசிகன் அருளிச்செய்த இந்த ஸ்ரீஸூக்திகளோடு விரோதிக்காமல் கீதார்த்தஸங்க்ரஹ ரக்ஷா ஸ்ரீஸூக்திக்குப் பொருள் கொண்டால், பலப்ரதனாய்க் கொண்டு, ஸித்தோபாயமாய் நிற்கும் எம்பெருமானோடு ஸமமாக எம்பெருமானின் நிக்ரஹ நிவ்ருத்திக்கே காரணமாயும், வ்யாஜமாத்ரமாயும் உள்ள ஸாத்யோபாயத்தை மோக்ஷ பலனுக்கு ப்ரதாந உபாயமாக நினைக்கக்கூடாது என்று கூறுவதிலேயே தாத்பர்யம் என்கிற உண்மை புரியம்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

# 6 ஸித்தோபாய ப்ரதிபத்தியே மோக்ஷ ஸாதனமாகுமா?

"தேசிக ஹ்ருதயம்"
கட்டுரையில் வெளிவந்த விஷயமாவது :

"ஸ்வீகாரம் தானும் அவனாலே வந்தது. ச்ருஷ்டி அவதாராதி முகத்தாலே பண்ணின க்ருஷி பலம்" என்ற பிள்ளைலோகாசார்யருடைய ஸ்ரீஸூக்திக்கு சார்பாக தேசிகன் 'நிதாநம் தத்ராபி ஸ்வயம் அகில நிர்மாண நிபுண:' என்று ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஒன்பதாவதான உபாயவிபாகாதிகாரத்தின் முகப்பில் ஸாதித்துள்ள ச்லோகம் வடிகட்டின சாஸ்த்ரார்த்தமாகவன்றோ விளங்குகிறது. 'நிதானம் தத்ராபி ஸ்வயம் அகில நிர்மாண நிபுண:' என்கிற நான்காம் பாதமானது தென்னாசார்ய ஸித்தாந்த ஸர்வஸ்வம் என்று கொள்ளக்கடவது. சேதனன் தலையிலே சிறு நாற்றத்தையும் ஸஹியாதே அறவே துடைத்தொழிக்கும் வார்த்தையன்றோ இது.

இதற்கு மறுப்பு பின்வருமாறு காட்டப்பெறுகிறது:

ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ப்ரதாந ப்ரதிதந்த்ராதிகாரத்தில்

**"உடையவன் உடைமையை ரக்ஷிக்கையும் ஸமர்த்தன் அஸமர்த்தனை ரக்ஷிக்கையும் ப்ராப்தமிறே. ரக்ஷிக்கும்போது கர்மவச்யரை ஒருபாயத்திலே மூட்டி ரக்ஷிக்கை ஈச்வரனுக்கு ஸ்வஸங்கல்ப நியதம்"**

என்று அருளிச்செய்தார்.

இந்த ஸ்ரீ ஸூக்திக்கு விவரணமாகவே உபாயவிபாகாதிகாரத்தில் முதல் ஸ்லோகம் அமைந்தது.

"உபாய: ஸ்வப்ராப்தே: உபநிஷத் அதீத: ஸ பகவாந்
ப்ரஸத்யை தஸ்யோக்தே ப்ரபதந நிதித்யாஸந கதீ
ததாரோஹ: பும்ஸ: ஸுக்ருத பரிபாகேண மஹதா
நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:"

பகவான் தன்னை அடைவதற்குத் தானே உபாயமாக உபநிஷத்துக்களால் சொல்லப்படுகிறான். பக்தி, ப்ரபத்தி ஆகியவை அந்த பகவானுடைய அனுக்ரஹத்தின் பொருட்டு சொல்லப்படுகின்றன. ஒருவன் அந்த பக்தி ப்ரபத்திகளுள் ஒன்றை அனுஷ்டிப்பது, பெரிய ஸுக்ருதத்தின் பரிபாகத்தால் உண்டாகிறது. அந்த உபாயங்களைச் செய்வதிலும் எல்லாவற்றையும் செய்யவல்ல பகவான் தானே ஆதிகாரணம் என்பதையே ''நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:'' என்கிற நான்காம் வரியில் அருளிச்செய்கிறார்.

இதற்கு மேல் பரிகரவிபாகாதிகாரத்தில் கடைசி ஸ்லோகத்தில்,

"ப்ரக்யாத: பஞ்ச ஷாங்க: ஸக்ருத் இதி
பகவச் சாஸநை: ஏஷ யோக:
தத்ர த்வாப்யாம் அபாயாத் விரதி:
அநிதரோபாயதா ஏகேந போத்யா
ஏகேந ஸ்வாந்ததார்ட்யம் நிஜபர விஷயே
அந்யேந தத் ஸாத்யதேச்சா
தத்வ ஜ்ஞான ப்ரயுக்தா து இஹ
ஸபரிகரே தாததீந்யாதி புத்தி:''

என்று அருளிச்செய்கிறார். அதாவது, மோக்ஷத்திற்காக அனுஷ்டிக்கப்படும் அங்கங்களுடன் கூடிய ப்ரபத்தி அனுஷ்டானத்தில் இது எம்பெருமானாலேயே செய்விக்கப் படுகிறது என்ற எண்ணமோ சாஸ்த்ரத்தால் உண்டான

உண்மையான ஜ்ஞானத்தால் அதாவது, தத்வ ஜ்ஞானத்தால் வருகிறது என்று பொருள்.

அந்த பரிகரவிபாகாதிகாரத்தில், ப்ரபத்தியின் அங்கங்களையும் அதன் உபயோகங்களையும் அருளிச் செய்யுமிடத்தில், கோப்த்ருத்வ வரணமாகிற அங்கத்தின் அவசியத்தை அருளிச் செய்கிறார்.

"ஸ்வரூப அனுசித புருஷார்த்தங்கள் போலே ஸ்வரூப ப்ராப்தமான அபவர்கமும் புருஷார்த்தமாம்போது, புருஷன் அர்த்திக்க கொடுக்க வேண்டுகையாலே, இங்கு கோப்த்ருத்வ வரண ம் அபேக்ஷிதம்";

"நன்றாய் இருப்பது ஒன்றையும் இப்புருஷன் அர்த்திக்கக் கொடாதபோது, புருஷார்த்தம் கொடுத்தான் ஆகாதிறே".

ஆகையாலேயிறே "அப்ரார்த்திதோ ந கோபாயேத்"; "கோப்த்ருத்வவரணம் நாம ஸ்வாபிப்ராய நிவேதநம்" (லக்ஷ்மீ தந்த்ரம்) என்றும் சொல்லுகிறது.

என்று அருளிச்செய்து, மேலே

''இப்படி இவை ஐந்தும், (ஐந்து அங்கங்களும்) இவ்வித்யாநுஷ்டான காலத்தில் உபயுக்தங்களாகையால், இவை இவ்வாத்ம நிக்ஷேபத்துக்கு அவிநாபூத ஸ்வபாவங்கள்''

என்றும் அருளிச்செய்தார். பிறகு ஸாங்கப்ரபதநாதிகாரத்தில், ப்ரபத்தியாகிற அங்கிஸ்வரூபத்தை விவரித்தருளினார்.

இதற்கு மேல்,

"ஸித்தோபாய ஸ்வீகாரம் என்ற பாசுரத்திற்கும், ஸித்தோபாயத்தை அறிந்து அது தமக்கு கார்யகரமாம்படி பண்ணுகிற விதி ப்ராப்த ப்ரார்த்தநாபூர்வக பரந்யாஸ ரூப அதிகாரி க்ருத்யத்திலேயிறே தாத்பர்யம்"

என்று ஸ்வாமி ஸ்ரீ தேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் சரம ஸ்லோகாதிகாரத்தில் ஸாதித்தருளியுள்ளார்.

"சேஷபூதனுமாய், பரதந்த்ரனுமான இவனுக்கு யதாதிகாரம், ஸ்வரக்ஷணார்த்த வ்யாபாரம் பண்ணக் குறையில்லை"

என்றும் ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில், ஸாத்யோபாய சோதநாதிகாரத்தில் அருளிச்செய்துள்ளார்.

ஐந்து அங்கங்களுடன் கூடிய அங்கியான ப்ரபத்தி அனுஷ்டானத்திற்கு ஸாத்யோபாயத்வத்தை இசைந்த பிறகன்றோ, உபாயவிபாகாதிகாரத்தில் நாலாவது அடியில் "நிதாநம் தத்ராபி ஸ்வயமகில நிர்மாண நிபுண:" என்று சொன்னபடி, அந்த உபாயத்தைச் செய்வதிலும் எல்லாம் செய்யவல்ல பகவான் தானே ஆதிகாரணம் அதாவது அங்கங்களுடன் கூடிய இந்த ப்ரபத்தி அனுஷ்டானத்தில் இது எம்பெருமானாலேயே, செய்விக்கப்படுகிறது என்கிற எண்ணம் உண்டாக வழியுண்டு.

ஆனால் பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த ஸ்ரீவசநபூஷணம் ஸூத்ரம் 62ல் கூறப்படுவதாவது "ஆபத்தைப் போக்கிக் கொள்கிறோம் என்று ப்ரமித்து அத்தை விளைத்துக் கொள்ளாதொழிகையே வேண்டுவது." இந்த ஸூத்திரத்திற்குப் பொருள், "ஆனாலும் பிறவிக் கடலிலே அழுந்திக் கிடந்து அலைகிற தன்னுடைய ஆபத்தை உணர்ந்தால், ஆபந்நிவர்த்தகரான எம்பெருமானை தன் ப்ரவ்ருத்தியாலே வசப்படுத்தி அவனுடைய ப்ரஸாதத்தாலே, இத்தை கழித்துக் கொள்ள வேண்டாவோ? என்னில் எம்பெருமான் திருவடிகளிலே ப்ரபத்தி பண்ணி ஸம்ஸாரமாகிற ஆபத்தை போக்கிக் கொள்கிறோம் என்று தான் பண்ணுகிற ப்ரபத்தியாலே தன் ஆபத்தை போக்கிக் கொள்வதாக ப்ரமித்து ஸ்வரூபநாசமாகிற ஆபத்தை விளைத்துக் கொள்ளாதொழிகையே இவன் செய்ய வேண்டுவது. ஓர் ஆபத்தை

பரிஹரித்துக்கொள்ள முயன்று, மற்றொரு ஆபத்தை விளைத்துக் கொள்ளாதே, இவன் ஸ்வயத்னத்தில் நின்றும் விலகியிருக்கவே எம்பெருமான் தானே ரக்ஷிக்கும் என்று கருத்து" என்றல்லவோ கூறப்படுகிறது.

இப்படி ஸ்வரக்ஷணார்த்த ஸ்வவ்யாபாரம் கூடாது என்று கூறும் இவர்களுக்கு ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில், உபாயவிபாகாதிகாரத்தில், எம்பெருமானின் அனுக்ரஹத்தின் பொருட்டு ஸாத்யோபாயத்தை அனுஷ்டிக்க வேண்டும் என்று கூறி, அந்த உபாயங்களைச் செய்வதிலும், எம்பெருமானே ஆதிகாரணம், அதாவது அவன் செய்விக்கச் செய்யப்படுகிறது என்று கூறியிருப்பதை உணர்ந்தால், தேசிக ஹ்ருதயத்தில் "நிதானம் தத்ராபி ஸ்வயம் அகில நிர்மாண நிபுண: என்கிற நான்காம் பாதமானது தென்னாசார்ய ஸித்தாந்த ஸர்வஸ்வம் என்று கொள்ளக்கடவது" என்று கூறியிருப்பது எங்ஙனே பொருந்தும்? மாறாக தென்னாசார்ய ஸித்தாந்தத்திற்கு கண்டனமாகவே அமையும் என்பதை ஸஹ்ருதயர் அறிந்து கொள்வது.

ஸ்ரீ:
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

# 7 ஸித்தோபாய ப்ராதான்யமென்பது ஸாத்யோபாயத்தை விலக்குகிறதா?

"தேசிக ஹ்ருதயம்"
கட்டுரையில் வெளிவந்த விஷயமாவது :

ஸாரஸாரத்தில் சரம ஸ்லோகாதிகாரத்தில், ''இப்படி விதேயமான ப்ரபதநத்தைச் சிலர் அதிகாரி விசேஷணம், ஸம்பந்த ஜ்ஞான மாத்ரம், ஸித்தோபாய ப்ரதிபத்தி மாத்ரம், அநிவாரண மாத்ரம், அநுமதிமாத்ரம், அசித்வ்யாவ்ருத்தி மாத்ரம், சைதந்ய க்ருத்யம், சித்த ஸமாதாநம் என்றாற் போலே சொல்லுமதுவும் இவ்விதிக்கும், இத்தை விஸ்தரிக்கிற சாஸ்த்ரங்களுக்கும், இவற்றுக்குச் சேர்ந்த உபபத்திகளுக்கும் பாஷ்ய கத்யாதிகளுக்கும், நிபுண ஸம்ப்ரதாயங்களுக்கும், அநுகுணமாக வேண்டுகையாலே, "நானே நானாவித நரகம் புகும் பாபம் செய்தேன்" என்று நிற்கிற நம்மை, ஈச்வரன் ரக்ஷிக்கிற இடத்தில் வந்தடைந்தேன் என்று நாம் பண்ணுகிற, அல்பமான வசீகரண யத்நம் 'அதுவும் அவனதின்னருளே', 'இசைவித் தென்னை' இத்யாதிகளின் படியே அவன் தானே காட்டி ப்ரவர்த்திப்பித்ததொரு வ்யாஜமாத்ரமன்றோ என்று ஸித்தோபாய ப்ராதாந்ய அநுஸந்தானத்தில் அவர்களுக்குத் தாத்பர்யம்" என்று அருளிச்செய்திருப்பது காணீர்.

"உண்மையான சாஸ்த்ரார்த்தம் எதுவோ அதைத்தான் இங்கு வெளியிட்டருளினார். "அவர்களுக்குத் தாத்பர்யம்" என்ற இதனையே பல இடங்களில் தம்முடைய தாத்பர்யமாகவே வெளியிட்டிருப்பதை கீழே காட்டியுள்ளோம்" என்று கூறியுள்ளார்.

இதற்கு மறுப்பு பின்வருமாறு காட்டப்பெறுகிறது:

ஸாரஸாரத்தில் சரம ஸ்லோகாதிகாரத்தில்,

"இப்படி ஸித்த உபாயமான தன்னைக்காட்டி, 'சரணம் வ்ரஜ' என்று தனக்கு வசீகரணமான, ஸாத்ய உபாயத்தை விதிக்கிறான். கத்யர்த்தமான 'வ்ரஜ' என்கிற தாது புத்யர்த்தமாய், அத்யவஸாய முகத்தாலே ஸக்ருத் கர்த்தவ்ய ஸாங்க பரந்யாஸத்தை காட்டுகிறது." "இது விதி என்னுமிடம் ஸ்வாரஸ்யாதிகளாலும் இத்தைப் ப்ரபஞ்சிக்கிற சாஸ்த்ரங்களாலும் ஸித்தம்"

என்று அருளிச் செய்து, இதற்கு மேல்

"இப்படி விதேயமான ப்ரபதநத்தைச் சிலர் அதிகாரி விசேஷணம், ஸம்பந்த ஜ்ஞான மாத்ரம், ஸித்த உபாய ப்ரதிபத்தி மாத்ரம், அநிவாரண மாத்ரம், அநுமதி மாத்ரம், அசித்வ்யாவ்ருத்தி மாத்ரம், சைதந்ய க்ருதயம், சித்த ஸமாதாநம் என்றாற்போலே சொல்லுமதுவும், இவ்விதிக்கும், இத்தை விஸ்தரிக்கிற சாஸ்த்ரங்களுக்கும், இவற்றுக்குச் சேர்ந்த உபபத்திகளுக்கும், பாஷ்யகத்யாதிகளுக்கும், நிபுண ஸம்ப்ரதாயங்களுக்கும் அநுகுணமாக வேண்டுகையாலே, "நானே நானாவித நரகம் புகும் பாபம் செய்தேன்" என்று நிற்கிற நம்மை, ஈச்வரன் ரக்ஷிக்கிற விடத்தில் வந்து அடைந்தேன் என்று, நாம் பண்ணுகிற அல்பமான வசீகரண யத்நம் 'அதுவும் அவனதின்னருளே', 'இசைவித்து என்னை' இத்யாதிகளின் படியே அவன் தானே காட்டி ப்ரவர்த்திப்பித்ததொரு வ்யாஜமாத்ரமன்றோ என்று ஸித்த உபாய ப்ராதாந்ய அநுஸந்தானத்தில் அவர்களுக்குத் தாத்பர்யம்"

என்று அருளிச் செய்தார்.

இதற்கு மேல், தன் ரக்ஷணத்திற்காகத் தான் ப்ரவர்த்திக்கும் போதும் தான் நினைத்தபடி நடத்த ப்ராப்தியில்லை. தானே வ்யாபரிக்கைக்குச் சக்தியும் இல்லை. பர அபிமத உபாயத்திலே பர ப்ரேரிதனாய்க் கொண்டு ப்ரவர்த்திக்கிறேன் என்று இவ்வளவே அனுஸந்தேயம் என்றும் அருளிச் செய்தார்.

இனி ஸ்வாமி ஸ்ரீதேசிகன் அருளிச்செய்த இந்த ஸ்ரீ ஸூக்தியின் தாத்பர்யத்தைப் பார்ப்போம். இப்படி சாஸ்த்ரங்களில் செய்ய வேண்டியதாய் விதிக்கப்பட்டுள்ள ப்ரபத்தியின் உருவத்தை சிலர் வேறுபடுத்திக் கூறுகின்றனர். சிலர் ப்ரபத்தி என்பது அதிகாரி விசேஷணம் என்றும் ஸம்பந்த ஜ்ஞானமாத்ரம் என்றும் ஸித்த உபாய ப்ரதிபத்தி மாத்ரம் என்றும் அநிவாரண மாத்ரமென்றும் அநுமதி மாத்ரமென்றும் அசித்வ்யாவ்ருத்தி மாத்ரமென்றும், சைதந்யக்ருத்யமென்றும் சித்த ஸமாதானம் என்றும் இவ்வாறெல்லாம் தோன்றியபடி ப்ரபத்திக்கு உருவத்தைக் கற்பிக்கின்றனர். இந்த வாதங்களை அவ்வாறே ஏற்றால், சரம ஸ்லோகத்தில் 'சரணம் வ்ரஜ' என்று தனக்கு வசீகரணமான ஸாத்ய உபாயத்தை விதித்திருப்பதற்கு விரோதம் வரும். இந்த ப்ரபத்தியை விரித்துரைக்கும் பல சாஸ்த்ரங்களுக்கும் முரண்படும். ஸ்ரீகீதாபாஷ்யம், கத்யம் முதலானவற்றில் ப்ரபத்தியின் ஸ்வரூபத்தை விளக்கிக் கூறியிருக்கும் முறைக்கும் எதிராகும். ஸாத்வீகப் பெரியோர்கள் ப்ரபத்தியை அனுஷ்டித்து வந்த முறைக்கும் பொருந்தாது போகும்.

அவர்களின் வாதங்களை அப்படியே கழித்து விடாமல் இத்தனை ஆதாரங்களுக்கும் பொருந்துமாறு அவர்கள் கருத்தையும் அனுகூலமாக்கிக் கொள்வதற்கு ஒரே வழியுண்டு. அதாவது ஸித்தோபாயமான எம்பெருமானே ப்ரதாந உபாயமாவான் என்ற கருத்தைக் கொண்டு, ப்ரபத்தியை பல உருக்கொடுத்து பேசினார்கள் என்று கருதவேண்டும். எம்பெருமானுடைய வசீகரணார்த்தமாக

நாம் செய்யும் சிறு செயலான ப்ரபத்தியையும் ஸ்வதந்த்ரமாகச் செய்யவில்லை. இதையும் அவனே காட்டிக் கொடுத்து நடத்தி வைக்கிறான். ஆதலால் ப்ரபத்தியைக் காட்டிலும் அவனே மிகவும் முக்கியமான உபாயம் ஆவான். இப்படி அவனைப் போல் ப்ரபத்தி அவ்வளவு முக்கியமான உபாயமாகாது. வ்யாஜமாத்ரமே என்ற கருத்தால், ப்ரபத்தியின் உருவை பலவகையாகக் கூறிவைத்தார்கள் என்று கருத வேண்டும் என்பதே ஸாரஸார ஸ்ரீஸூக்திக்குத் தாத்பர்யம்.

இனி ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸார சரம ஸ்லோகாதிகாரத்தில் அருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்தியைப் பார்ப்போம்.

> "இப்படி ஸித்தோபாயத்தைப் பற்ற ஸாத்யோபாயம் வ்யாஜமாத்ரமாய் இது ப்ரதாநமன்றிக்கே நிற்கிற நிலையைப் பற்ற ஸம்பந்த ஜ்ஞானமாத்ரம், ஸித்தோபாய ப்ரதிபத்தி மாத்ரம், அநிவாரண மாத்ரம், அநுமதி மாத்ரம், அசித்வ்யாவ்ருத்தி மாத்ரம், சைதந்ய க்ருத்யம், சித்த ஸமாதாநம், அதிகாரி விசேஷணம் என்று இப்புடைகளிலே அதிவாதம் பண்ணினார்கள். இவ் அந்ய பரோக்தியைக் கொண்டு இவைதாமே அர்த்தம் என்று அறுதியிடவொண்ணாது. இவையெல்லாம் 'சரணம் வ்ரஜ' என்கிற விதிக்கு விருத்தங்களாம். அதிப்ரஸங்காதி தோஷங்களும் உண்டு" அது எங்ஙனேயென்னில்

என்று ஆரம்பித்து, மேலே சாஸ்த்ர விஹிதமான ஸாத்யோபாயமான ப்ரபத்தியின் ஸ்வரூபத்தை இப்படி பலபடியாகக் கற்பிக்கிற அவர்களுடைய வாதங்களை நிரஸித்தருளினார்.

இதற்கு மேல்

"ஈச்வரன் ப்ரஸாதநீயனாய் ப்ரதாநமான ஸித்தோபாயம். பக்தி ப்ரபத்திகள் இரண்டும் ப்ரஸாதநீயங்களாய்க் கொண்டு ப்ரதாநமல்லாத ஸாத்யோபாயங்கள். இவை இரண்டத்தொன்றிலே யதாதிகாரம் நிலையாகக் கடவது"

என்றும் அருளிச் செய்தார்.

ஆக இவ்வளவால், ஸ்வாமி ஸ்ரீதேசிகன் சாஸ்த்ரவிஹிதமான ஸாத்யோபாய அனுஷ்டானத்தை இசைந்தே அதை பலப்ரதனான ஸித்தோபாயத்தோடு துல்யமாக, பலத்திற்கு ப்ரதாந உபாயமாக நினைக்காமல் வ்யாஜமாத்ரமாக நினைத்தே அனுஷ்டிக்கவேண்டும் என்பதையே, தம்முடைய அனைத்து ஸ்ரீஸூக்திகளிலும் ஸ்தோத்ர பாடங்களிலும், மற்றும் தேசிகப் பிரபந்தங்களிலும் ஒரே ரீதியாகவே அருளிச்செய்கிறார் என்பதை ஸஹ்ருதயர் அறிந்துகொள்வது.

பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த ஸ்ரீவசந பூஷணத்தில் ஸூத்ரம் 54ல் கூறப்படுவதாவது, "இது தன்னைப் பார்த்தால், பிதாவுக்கு புத்ரன் எழுத்து வாங்குமாப்போலே இருப்பதொன்று" என்று. எம்பெருமான் தன்னை ரக்ஷிக்கைக்கு ஹேதுவாக இச்சேதனன் பண்ணும் ப்ரபத்தியை நிரூபித்தால், ஸர்வா-வஸ்தைகளிலும் தன்னை ரக்ஷித்துக் கொண்டு போரும் தகப்பனுக்கு பிள்ளையானவன் தான் அறிந்த தசையிலே என்னை நீ ரக்ஷிக்கவேணும் என்று எழுத்து வாங்கினால் இரண்டு தலைக்கும் உண்டான உறவு விரசப்படுமாப்போலே, ஸர்வேச்வரனுக்கும் இவனுக்கும் உண்டான ஸம்பந்தத்துக்கு அவத்யாவஹமாய் ஆயிற்றிருப்பது இந்த ப்ரபத்தி என்று, இந்த ஸூத்திரத்தற்குப் பொருள் கூறப்படுகிறது.

ஸாரஸாரத்தில், சரம ஸ்லோகாதிகாரத்தில்

> "இப்படி விதேயமான ப்ரபதநத்தை என்று ஆரம்பித்து.... ஸித்தோபாய ப்ராதாந்ய அநுஸந்தானத்தில் அவர்களுக்குத் தாத்பர்யம்"

என்று அருளிச்செய்தது அவ்வாறு ஏற்றுக் கொண்டால் ப்ரமாண விரோதம் வாராமல் இருக்கும் என்று கூறுவதிலேயே ஸ்வாமி ஸ்ரீதேசிகனுக்குத் தாத்பர்யம்.

> "பரமபுருஷார்த்த ததுபாயங்களை வேண்டியிருந்தாயாகில் நீ தாஸனாய், ஈச்வரன் ஸ்வாமியாய் இருக்கிறது ஸ்வபாவ ஸித்தம் என்று தத்வத்திலே தெளிவோடே வர்த்தி என்றபடி அன்றோ. ஆனால் இப்போது ஆத்ம ஸமர்ப்பணம் என்று ஒரு விதேயம் உண்டோ? என்று சொல்லுவார்கள். இதுவும் வாக்யஜந்ய ஜ்ஞானமாத்ரத்தாலே மோக்ஷமென்கை போலே அநாதரணீயம்"

என்று ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸாத்யோபாய சோதநாதிகாரத்தில் அருளிச் செய்துள்ளார்.

> "ஸம்பந்த ஜ்ஞானமாத்ரமென்றாலும் ஸித்தோபாய ப்ரதிபத்தி மாத்ரமென்றாலும், இது வாக்யமாத்ர ஜந்யமாகில் விதி விஷயமாகமாட்டாது. அவிதேய ஜ்ஞானத்தாலே மோக்ஷமென்பார்க்கு உபாஸநாதி விதி விரோதம் பாஷ்யாதி ஸித்தம்"

என்று ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் சரம ஸ்லோகாதிகாரத்தில் அருளிச்செய்தார்.

ஆக இவ்வளவால் விதேயமான ப்ரபதநத்தை ஸம்பந்த ஜ்ஞானமாத்ரம், ஸித்தோபாய ப்ரதிபத்திமாத்ரம் என்று சொல்லுபவரின் வாதத்தை ஸ்வாமி ஸ்ரீதேசிகன் நிரஸித்தாராயிற்று. இதனால் ஸாரஸாரத்தில் அருளிச் செய்துள்ள விஷயம் தென்னாசார்ய ஸம்ப்ரதாயத்திற்கு ஸாதகமாகாது என்பதை அறியலாம்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

# 8 பக்தி யோகம் ஸ்வரூப விருத்தமா?

"தேசிக ஹ்ருதயம்"
கட்டுரையில் வெளிவந்த விஷயமாவது :

உபாயாந்தர பரித்யாகத்திற்கு ஜ்ஞான சக்திகள் இல்லாமையே ஹேதுவன்று. எம்பெருமானுக்கு அத்யந்தம் பரதந்த்ரபட்டிருக்கையாகிற ஸ்வரூபத்திற்குச் சேராது என்னுமதுவே முக்ய ஹேதுவென்று ஸதாசார்ய ஸித்தாந்தம். அஜ்ஞானம் அசக்தியுமடியாக விடுவதானால், ஜ்ஞான சக்திகள் உண்டாகில் அவற்றை பரிக்ரஹிக்க வேண்டிவருமன்றோ. ஸ்வரூப விரோதியென்று விட்டாலன்றோ, மறுவலிடாதொழிவது. ஆகவே ஸ்வரூப விருத்மென்னுமதுவே ப்ரதாந ஹேது.

இதை ஸ்வாமி தேசிகன் ந்யாஸதிலகத்திலே வெகு சாதுர்யமாக காட்டியருளினார். எங்ஙனேயென்னில், அது தன்னிலுள்ள ச்லோகமிது

"ஆர்த்தேஷ்வாசுபலா ததந்ய
விஷயேப்யுச்சிந்ந தேஹாந்தரா
வஹ்ந்யாதேரநபேக்ஷணாத்
தநுப்ருதாம் ஸத்யாதிவத் வ்யாபிநீ
ஸ்ரீரங்கேச்வர யாவதாத்மநியத
த்வத் பாரதந்த்ரயோசிதா
த்வய்யேவ த்வதுபாய தீரபிஹித
ஸ்வோபாய பாவாஸ்து மே"

இதில் ப்ரபத்திக்கு இட்டிருக்கிற விசேஷணங்கள் அத்தனையும் பக்திவேஷ வ்யாவர்த்தகங்கள் என்று ஆரம்பித்து மேலே ("யாவதாத்ம நியத த்வத் பாரதந்த்ர்ய உசிதா") பக்தி ஸ்வரூப விருத்தம். ப்ரபத்தி ஸ்வரூப அனுரூபம் என்கிறது. யாவதாத்ம நியதமான அத்யந்த பாரதந்த்ர்யத்துக்கு, ப்ரபத்தி உசிதமாயிருக்கு-மென்றபோதே ப்ரபத்தி ப்ரதிகோடியான பக்தியானது அந்த பாரதந்த்ரியத்துக்கு விருத்தமாயிருக்கு மென்னுமிடம் ஸ்பஷ்டமாக தெரிவிக்கப்பட்டதாயிற்றன்றோ? ஆகவே தேசிகன் திருவுள்ளம் உபாயாந்தரம் ஸ்வரூப விருத்தமென்பதே என்று தேறி நின்றது என்று காட்டியுள்ளார்.

இதற்கு மறுப்பு பின்வருமாறு காட்டப்பெறுகிறது:

ஸ்ரீபாஷ்யகாரர் ஸ்ரீபாஷ்யத்தில், மூன்றாவது அத்யாயமான ஸாதநாத்யாயத்திலும், மற்றும் ஸ்ரீகீதாபாஷ்யத்திலும் மோக்ஷோபாயமாக சாஸ்த்ரவிஹிதமான பக்தியோகத்தைப் பற்றி, மிக விஸ்தாரமாக அருளிச்செய்கிறார். ஸ்ரீகீதாபாஷ்யத்தில் "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்கிற சரம ஸ்லோக வ்யாக்யானத்தில், ப்ரதம யோஜனையில், புத்தி விசேஷ ரூபமான ஸாத்வீக த்யாகம் சொல்லப்படுகிறது என்று ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்துள்ளார். அதாவது பக்தியோகத்தைச் செய்யும்போது, அவற்றுக்கு நான் கர்த்தா என்கிற எண்ணத்தையும், அவை தனக்கு சேஷம் என்கிற எண்ணத்தையும், அவற்றால் வரும் பலன்கள் தனக்கு என்கிற எண்ணத்தையும், விடுகையாகிற ஸாத்வீக த்யாகத்தோடு செய்ய வேண்டும் என்று அருளிச்செய்கிறார்.

ஸ்ரீபாஷ்யகாரர் ஸ்ரீஸூக்தியைப் பின்பற்றியே ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீஸூக்திகள் யாவும் அமைந்திருக்கின்றன என்பதை முதலில் ஸஹ்ருதயர் நன்கு அறிந்துகொள்ள வேண்டும். ப்ரமாணத்திற்கும், ஸதாசார்ய ஸத்ஸம்ப்ரதாயத்திற்கும் விருத்தமாக ஸ்வாமி ஸ்ரீதேசிகன் எதையும் அருளிச்செய்யமாட்டார்.

"தர்க்க பாண்டித்யத்தாலே நினைத்ததெல்லாம் ஸாதிக்க-லாயிருக்கச்செய்தேயிறே நாம் ப்ரமாண சரணராய் போருகிறது"

என்றன்றோ ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் தத்வத்ரய சிந்தநாதிகாரத்தில் அருளிச் செய்துள்ளார். ஆக மோக்ஷோ-பாயமாக, பக்தியோகத்தை விதிக்கிற ஸ்ருதி வாக்யங்களுக்கும் ஸ்ரீபாஷ்யகார ஸத்ஸம்ப்ரதாயத்திற்கும் விருத்தமாக பக்தி யோகத்தை ஸ்வரூப விருத்தம் என்று ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஒருக்காலும் திருவுள்ளம் பற்ற மாட்டார் என்பதை முதலில் நன்கு புரிந்து கொள்ள வேண்டும்.

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ப்ரபத்தியோக்யாதிகாரத்தில், ப்ரபத்திக்கு தகுதியுடையவனைப் பற்றி அருளிச்செய்கிறார். அதில், ப்ரபத்தியை அனுஷ்டிப்பவனுக்கு விசேஷித்த அதிகாரங்கள் ஆகிஞ்சந்யமும், அநந்யகதித்வமும். ஆகிஞ்சந்யமாவது, உபாயாந்தர ஸாமர்த்ய அபாவம். அதாவது உபாயாந்தரங்களில் (பக்தியோகத்தில்) இவ்வதிகாரியினுடைய அஜ்ஞான அசக்தி-களும், பல விளம்ப அஸஹத்வமும் என்று அருளிச்செய்கிறார்.

இதனால் உபாயாந்தர பரித்யாகத்திற்கு ஜ்ஞான சக்திகள் இல்லாமையே ஹேதுவன்று. எம்பெருமானுக்கு அத்யந்த பரதந்த்ரப்பட்டிருக்கையாகிற ஸ்வரூபத்துக்குச் சேராது என்னமதுவே முக்ய ஹேதுவென்று ஸதாசார்ய ஸித்தாந்தம் என்று தேசிக ஹ்ருதயத்தில் வெளிவந்த விஷயம் பகவத் ராமாநுஜ ஸித்தாந்தத்தை அனுஸரித்த ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீஸூக்திகளுக்கு முற்றிலும் முரணானது.

உபாயாந்தர பரித்யாகத்திற்கு ஜ்ஞான சக்திகள் இல்லாமையே ஹேதுவென்பதை ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ப்ரபத்தியோக்யாதிகாரத்தில் அருளிச்செய்திருப்பதைக் கொண்டு அறியலாம். உபாயாந்தரம் ஸ்வரூப விருத்தமென்பதே தேசிகன் திருவுள்ளம் என்று தேசிக ஹ்ருதயத்தில் வெளிவந்த விஷயத்திற்கு இனி மறுப்பு கூறப்படுகிறது.

உபாயாந்தரம் (பக்தியோகம்), ஸ்வரூப விருத்தம் என்று கூறுபவர்களை, அதாவது, எம்பெருமானுக்கு அத்யந்தம் பரதந்த்ரப்பட்டிருக்கையாகிற ஸ்வரூபத்துக்குச் சேராது என்னுமதுவே உபாயாந்தர பரித்யாகத்திற்கு முக்ய ஹேதுவென்று கூறுபவர்களுடைய வாதங்களை ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸாத்யோபாய சோதநாதிகாரத்தில் விரிவாக் கண்டித்துள்ளார்.

"ஆனாலும், க்ஷேபூதனாகையாலே, தன்னைத்தானே ரக்ஷித்துக் கொள்ள ப்ராப்தனுமன்றிக்கே அத்யந்த பரதந்த்ரனாகையாலே, தன்னைத்தான் ரக்ஷித்துக் கொள்ள சக்தனுமன்றிக்கேயிருக்கிற இவனுக்கு ஸ்வரக்ஷணார்த்தமாக, கர்த்தவ்யமென்று ஒருபாயத்தை விதிக்கையும், அது இவனுக்கு ஸாத்யமாய், ஸாத்யோபாயமென்று பேர் பெறுகிறதென்று சொல்லுகையும் உபபந்நமோ? ஆனபின்பு பக்தியோகாதிகள் சேஷத்வ அனுரூபங்களல்லாமையாலே, ஸ்வரூபத்துக்கு அநிஷ்டாவஹங்கள் என்றும் அத்யந்த பாரதந்த்ர்ய விருத்தங்களாகையாலே அஸம்பாவிதங்கள் என்றும் சொல்லவொண்ணாதோவென்னில்"

என்று ஆரம்பித்து இந்த பூர்வபக்ஷத்தை நிரஸிக்கிறார்.

"இச்சேஷத்வத்தால் வகுத்தவிஷயத்தை பற்றுகையில் ஔசித்யமும் உடையவன் உடைமையை ரக்ஷிக்கையில் ஔசித்யமும் உண்டாம். அத்யந்த பாரதந்த்ரியத்தால், அவன் கொடுத்த ஸ்வாதந்த்ரியத்தைச் சுமந்து அவனுக்கு அபிமதங்களான உபாயங்களை அனுஷ்டிக்கையும், பலம் பெறுகைக்கு அவன் கைபார்த்திருக்கவேண்டுகையும் ஸித்திக்கும் "

என்று அருளிச்செய்து, மேலே,

"ஆகையால் சேஷபூதனுமாய், பரதந்த்ரனுமான இவனுக்கு யதாதிகாரம் ஸ்வரக்ஷணார்த்த வ்யாபாரம் பண்ணக் குறையில்லை"

என்று ஸாதிக்கிறார்.

மேலும், ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் சரமஸ்லோகாதிகாரத்தில்,

"அசித்துக்கள் சப்தாதிகளை ஈச்வரன் உண்டாக்க சுமக்கிறாப்-போலே இவ்வளவு ஸ்வாதந்த்ர்யத்தை எடுத்துச் சுமக்கையும் இவனுக்கு பகவத் பாரதந்த்ர்ய காஷ்டையிருந்தபடி"

என்றும் அருளிச்செய்தார்.

"ஆனபின்பு உபாஸநாதிகளுக்கு, வேறொரு விரோதம் இல்லாமையாலே, யதாசாஸ்த்ரம் ஆதுராதிகளுக்கு அவகாஹநாதிகள் போலே, இவை அகிஞ்சநோ அநந்யகதி: என்றிருக்கும் அதிகாரிக்கு ஸ்வ அதிகார விருத்தங்கள் என்னப் ப்ராப்தம். இவ்வதிகார விரோதம் அறியாதே உபாஸநாதிகளிலே, ப்ரவர்த்திக்குமவனைப் பற்ற 'நரஸ்ய புத்தி தௌர்பல்யாத் உபாயாந்தரமிஷ்யதே' என்றது. ஆகையால் இவ் உபாஸநாதிகளும் அதிகார்யந்தரத்துக்கு யதாதிகாரம் அநுகுணங்கள்"

என்று ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸாத்யோபாய சோதநாதிகாரத்தில் அருளிச்செய்துள்ளார்.

ஆக, உபாயாந்தர பரித்யாகத்திற்கு ஜ்ஞானசக்திகள் இல்லாமையே ஹேதுவன்று. எம்பெருமானுக்கு அத்யந்தம் பரதந்த்ரப்பட்டிருக்கையாகிற ஸ்வரூபத்திற்குச் சேராது என்னு மதுவே முக்கிய ஹேதுவென்று ஸதாசார்ய ஸித்தாந்தம் என்று தேசிகஹ்ருதயத்தில் அருளிச்செய்தது, ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்த ஸ்ரீபாஷ்ய ஸ்ரீகீதாபாஷ்ய ஸ்ரீஸூக்திகளோடும்,

ஸ்ரீபாஷ்யகாரர் ஸித்தாந்தத்தை அனுஸரித்து ஸ்வாமி ஸ்ரீதேசிகனால் அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீஸூக்திகளோடும், விரோதிக்குமாதலால் தேசிக ஹ்ருதயத்தில் அருளிச் செய்தது முற்றிலும் தவறானது என்பதை ஸஹ்ருதயர் அறிந்து கொள்வது.

தேசிக ஹ்ருதயத்தில் குறிப்பிட்டுள்ள ஸதாசார்ய ஸித்தாந்தம் என்பது பிள்ளைலோகாசார்ய ஸித்தாந்தமே என்கிற அபிப்ராயத்தில் கூறியிருக்கலாம். ஆனால் இது ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்தம் ஆகாது.

பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த ஸ்ரீவசநபூஷணம் ஸூத்ரம் 115ல் கூறப்படுவதாவது "ப்ராபகாந்தர பரித்யாகத்-துக்கும் அஜ்ஞான அசக்திகளன்று ஸ்வரூப விரோதமே ப்ரதாந ஹேது" என்று. இதற்குப் பொருளை, "உபாயாந்தரத்தை விடுவதற்குக் காரணம் அவற்றை அறிவதற்கும் அனுஷ்டிப்-பதற்கும் உறுப்பான ஜ்ஞான சக்திகள் இல்லாமையன்று. எம்பெருமானுக்கு மிகவும் பரதந்த்ரமாய் இருக்கையாகிற ஸ்வரூபத்துக்குச் சேராது என்னுமதுவே முக்யகாரணம். அதாவது உபாயாந்தரங்களை ஸ்வரூப விருத்தம் என்கிற காரணத்தாலே விடுமத்தனையொழிய, ஜ்ஞான சக்திகள் இல்லாமையாகிற காரணத்தாலே விடக்கடவதல்ல. அப்படி விட்டால், ஒருக்கால் ஜ்ஞான சக்திகள் உண்டாகில் அவ்வுபாயாந்தரங்களைப் பற்றவேண்டிவரும். ஸ்வரூப விரோதமென்று விட்டாலன்றோ, மறுபடியும் எப்போதும் பற்ற முடியாதொழிவது என்று கூறி, மேலே அடுத்த ஸூத்ரமான "ப்ராபகாந்தரம் அஜ்ஞர்க்கு உபாயம்" (116) என்றதுக்கு, "தன்னை ரக்ஷித்துக் கொள்வதில் தன் முயற்சியை கொஞ்சமும் ஸஹிக்கமாட்டாத ஸ்வரூபத்தை உள்ளபடி அறியப்பெறாதவர்களுக்கு அவை உபாயமாய் இருக்கும்" என்று காட்டி, மேலேயுள்ள "ஜ்ஞானிகளுக்கு அபாயம்" (117) "அபாயமாய்த்தது ஸ்வரூப நாசகமாகையாலே" (118) ஆகிய இரண்டு ஸூத்ரங்களுக்குப் பொருளாக, "ஆனால் ஜ்ஞானிகளுக்கு

இவை எப்படியிருக்குமென்னில் ஸ்வரூபத்தை உள்ளபடி உணர்ந்த ஜ்ஞானிகளுக்கு இவை அபாயமாயேயிருக்கும். ஜ்ஞானிகளுக்கு இவை அபாயமாவானேன் என்னில், அத்யந்த பாரதந்த்ர்யமாகிற ஸ்வரூபத்துக்கு தன் முயற்சிரூபமான உபாயாந்தரம் கெடுதியை விளைக்குமதாகையாலே அபாயமென்னக் குறையில்லை" என்று கூறுகிறார்.

இவ்வாறு அருளிச்செய்திருப்பது வேதவ்யாஸர் அருளிச் செய்த உபநிஷத்துக்களுக்கு வ்யாக்யானமாக அமைந்த ப்ரஹ்மஸூத்ரங்களோடும், ப்ரஹ்மஸூத்ரத்திற்கு வ்யாக்யானமாக ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்த ஸ்ரீபாஷ்ய ஸ்ரீஸூக்திகளோடும், ஸ்ரீபாஷ்யகாரர் ஸ்ரீஸூக்திகளை அனுஸரித்தே ஸ்வாமி ஸ்ரீதேசிகனால் அருளிச்செய்யப்பட்ட ஸ்ரீஸூக்திகளோடும் விரோதிக்கும் என்பதை ஸஹ்ருதயர் அறிந்து கொள்வது.

ஆக, "ஸ்வாமி ஸ்ரீதேசிகன் அருளிச்செய்த ந்யாஸதிலகத்தில் உள்ள ஒரு ஸ்லோகத்தை மட்டும் கொண்டு, யாவதாத்ம நியதமான அத்யந்த பாரதந்த்ர்யத்துக்கு ப்ரபத்தி உசித மாயிருக்குமென்றபோதே ப்ரபத்தி ப்ரதிகோடியான பக்தியானது அந்தப் பாரதந்த்ரியத்தக்கு விருத்தமாயிருக்குமென்னுமிடம் ஸ்பஷ்டமாகத் தெரிவிக்கப்பட்டதாயிற்று. ஆகவே தேசிகன் திருவுள்ளம் உபாயாந்தரம் ஸ்வரூபவிருத்தமேயென்று தேறி நின்றது" என்று தேசிக ஹ்ருதயத்தில் சொல்லியிருப்பது முற்றிலும் தவறான விஷயம் என்பதை ஸஹ்ருதயர் அறிந்துகொள்வது.

ந்யாஸதிலகத்தில் இந்த ச்லோகமானது ப்ரபத்தியின் ப்ரபாவத்தை கூறவந்ததேயன்றி பக்தியோகத்தை ஸ்வரூபவிருத்தமென்று கூறவரவில்லை. பக்தியோகத்தை ஸ்வரூபவிருத்தமென்று கூறுவதிலேயே ஸ்வாமி ஸ்ரீதேசிகனுக்கு திருவுள்ளமென்று தேசிக ஹ்ருதயத்தில் கூறியிருப்பது ஸ்வாமி ஸ்ரீதேசிகன்,

"இவ்வுபாஸநாதிகளும் அதிகார்யந்தரத்தக்கு யதாதிகாரம் அநுகுணம்"

என்று ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸாத்யோபாய சோதநாதிகாரத்தில், அருளிச்செய்த ஸ்ரீஸூக்தியோடு விரோதிக்கும்.

"அவகாஹநாதிகளில் ஸமர்த்தனல்லாதவனுக்கு, 'மாநஸம் விஷ்ணுசிந்தனம்' என்று பகவத் சிந்தநத்தை ஸ்நாநமாக விதித்தால், அது ஸ்நாநாந்தரங்கள் பண்ணுகிற சுத்தியையும் பண்ணி, பாபாந்தரங்களையும் சமிப்பித்து அப்போதே பகவதனுபவரஸத்தையும் உண்டாக்குமாப் போலே, உபாஸநாதிகளில் ஸமர்த்தனல்லாதவனுக்குப் ப்ரபத்தியை விதித்தாலும், இப்ரபத்தி தானே அவை கொடுக்கும் பலத்தையும் அவை தம்மையும், கொடுக்கவற்றாய், அகிஞ்ச னனுக்கு, உத்தாரகமாய், அவன் அபேக்ஷித்த காலத்திலே பல அவிநாபாவத்தையும், உடைத்தாயிருக்கையாலே அதிக ப்ரபாவமாயிருக்கும்"

என்று ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸாத்யோபாய சோதநாதிகாரத்தில், ப்ரபத்தியின் ப்ரபாவத்தை அருளிச்செய்தாரன்றோ.

ஆக இவ்வளவால், ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்த ஸ்ரீஸூக்திகளில் உள்ள விஷயங்களை அடியொற்றியே, அமைந்த ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீஸூக்திகளில் உள்ள விஷயங்களுக்கும் பிள்ளைலோகாசார்யார் அருளிச்செய்த ஸ்ரீஸூக்திகளில் உள்ள விஷயங்களுக்கும் மிகப்பெரிய அர்த்தபேதங்கள் உண்டு என்பதையும் பிள்ளைலோகாசார்யர் கொண்டிருந்த சாஸ்த்ரவிருத்தமான கொள்கைகள் யாவும், ஸ்வாமி ஸ்ரீதேசிகனால் தன் ஸ்ரீஸூக்திகளில் கண்டிக்கப்பட்டன என்பதையும் உண்மை என்றே ஸஹ்ருதயர் அறிந்து கொள்வது.

இதனால் தேசிக ஹ்ருதயத்தில் வெளிவந்த விஷயங்கள் யாவும், உண்மைக்குப் புறம்பானதாயும், அதனாலேயே கண்டனத்திற்கு உரியதாகவும் ஆயிற்று.

வேதாந்த வாக்கியங்கள் பரப்ரஹ்மத்தை ஸகுணமென்றும் நிர்குணமென்றும் கூறுகின்றன. ஸகுணமென்றால் குணங்களை உடையது. நிர்குணமென்றால் குணங்களற்றது என்று பொருள். இப்படி இரண்டு வாக்கியங்களையும் மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது, தோற்றுகிற விரோதமானது, உத்ஸர்க்க அபவாத ந்யாயத்தாலும், ஸாமாந்யவிசேஷ ந்யாயத்தாலும், பரிஹரிக்கப்பட்டு, நிர்குணபரமான வாக்கியங்களுக்கு ஹேய குணங்களின் இல்லாமையைச் சொல்லுவதில் நோக்கு என்றும், ஸகுண பரமான வாக்கியங்களுக்கு கல்யாண குணங்களைச் சொல்லுவதில் நோக்கு என்றும் ஸ்ரீபாஷ்யகாரரால் ஸ்ரீபாஷ்யத்தில் ஸித்தாந்தம் செய்யப்பட்டுள்ளது. அப்படியே பேதச்ருதி, அபேதச்ருதி இவைகளில் ஆபாதப்ரதீதியால் தோற்றும் விரோதம் சேதன அசேதநங்களுக்கும் பரமாத்மாவுக்கும் சரீராத்ம பாவ ஸம்பந்தத்தைக் கூறும் ஸ்ருதிகளைக் கொண்டு ஸ்ரீபாஷ்யத்தில் பரிஹரிகப்படுகிறது. ஸ்ருதிவாக்கியங்களுக்குள், ப்ராபல்ய தௌர்பல்யங்களைக் கூற இயலாது என்று, ஸ்ரீபாஷ்யகாரரால் அருளிச் செய்யப்பட்டு ஸ்ரீபாஷ்யத்தில் கடைசியில் இதி ஸர்வம் ஸமஞ்சஸம் என்று அருளிச்செய்தார்.

ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீஸூக்திகள் யாவும் ப்ரமாணத்தையும், பூர்வாசார்ய ஸத்ஸம்ப்ரதாயத்தையும் அநுஸரித்தே வந்தவை. ஒவ்வொரு இடங்களிலும் ப்ரமாண பரதந்த்ரர் இசையவேணும் என்றும், ப்ரமாணசரணராய் போருகிறது என்றும் அருளிச் செய்துள்ளார். ப்ரமாணத்திற்கும் பூர்வாசர்ய ஸத்ஸம்ப்ரதா யத்திற்கும், விரோதமாக எதையும் தம் ஸ்ரீஸூக்திகளில் அருளிச்செய்யமாட்டார். அதனால் ஸ்வாமி ஸ்ரீதேசிகன்

அருளிச்செய்த ஸ்ரீஸூக்திகளை மேலெழுந்தவாரியாகப் பார்த்து அர்த்தம் கூறாமல் அவர் அருளிச்செய்த மற்ற ஸ்ரீஸூக்திகளோடு விரோதிக்காமல் அவர் திருவுள்ளத்தை அஜ்ஞான ஸம்சய விபர்யயமற அவர் ஸ்ரீஸூக்திகளைக் கொண்டு தெளிவாக அறிந்து பொருள் கூற முற்பட்டால், வ்யாஸ ஸித்தாந்தமே, பகவத் ராமாநுஜ ஸித்தாந்தமாகும். பகவத் ராமாநுஜ ஸித்தாந்தமே ஸ்ரீதேசிக தர்சனமாகும் என்கிற உண்மை தெரியவரும்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

# 9 எம்பெருமானைப் போல் பிராட்டிக்கு ஈஸ்வரத்வம் உண்டா?

"தேசிக ஹ்ருதயம்"
கட்டுரையில் வெளிவந்த விஷயமாவது :

ஜகக்காரணத்வம் மோக்ஷப்ரதத்வம் விபுத்வம் ஆகிய இவற்றை பிராட்டியிடத்தில் தனிப்பட நிரூபிக்கும் விஷயத்தில் தேசிகன் சிறிதும் இறங்கவில்லை.

இதற்கு மறுப்பு பின்வருமாறு காட்டப்பெறுகிறது:

ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் மூலமந்த்ராதிகாரத்தில் அருளிச் செய்வதாவது

"ஸர்வரக்ஷண தீக்ஷிதனானவன்,
லக்ஷ்ம்யா ஸஹ ஹ்ருஷீகேச: தேவ்யா காருண்யரூபயா |
ரக்ஷக: ஸர்வஸித்தாந்தே வேதாந்தேபி ச கீயதே ||

இத்யாதிகளின்படியே ஸபத்நீகனாக ஸித்தனாய் இருக்கையாலே இங்கே பிரமாண ஸித்த உபயோக விசேஷமான பத்நீ ஸம்பந்தம் ஆர்த்தம். இப்படி ஸந்நியோக சிஷ்ட ந்யாயத்தாலே எம்பெருமானைச் சொல்லுமிடம் எங்கும் பிராட்டியையும் சொல்லிற்றாம் என்னுமிடத்தை 'ததந்தர்பாவாத்வாம் ந ப்ருதகபிதத்தே ச்ருதிரபி' என்று ஸமர்த்தித்தார்கள். ஆகையால் ஸ்வரூப நிரூபக தர்மங்கள் எல்லா வித்யைகளிலும் வருகிற கணக்கிலே, அவற்றில் ப்ரதாநமான இவ்விசேஷணமும் ஸர்வ வித்யைகளிலும் அநுஸந்தேயம்" என்று அருளிச் செய்தார்.

ஸந்நியோகசிஷ்ட ந்யாயமாவது 'ஸந்நியோகசிஷ்டாநாம் ஸஹவா ப்ரவ்ருத்தி: ஸஹவா நிவ்ருத்தி:' என்பது வ்யாகரண வசநம். ஒரே இடத்தில் சேர்ந்து விதிக்கப்பட்டவைகள் சேர்ந்தே வரும் அல்லது சேர்ந்தே போகும் என்பது. லக்ஷ்மியோடு கூடின எம்பெருமான் உலகை ரக்ஷிக்கிறவன் என்று ப்ரமாணங்கள் இருவரையும் சேர்த்தே சொல்லுகிறபடியால் லக்ஷ்மியும் உலகை ரக்ஷிக்கிறவள் ஆகிறாள். அப்படி லக்ஷ்மிக்கு ரக்ஷகத்வத்தை ஒப்புக்கொள்ளாவிடில் இருவருமே ரக்ஷிக்கின்றவர்களாக ஆக முடியாது என்பதே ஸந்நியோகசிஷ்ட ந்யாயமாகும்.

இவ்விஷயத்தை ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ஸித்தோபாய சோதநாதிகாரத்தில் ஒரு ஸ்லோகத்தாலே அருளிச்செய்கிறார்.

"ஸமஸ்த புருஷார்த்தாநாம் ஸாதகஸ்ய தயாநிதே:
ஸ்ரீமத: பூர்வ ஸித்தத்வாத் ஸித்தோபாயம் இமம் விது:"

சதுர்வித புருஷார்த்தங்களையும் கொடுப்பதில் சக்தியுள்ள கருணைக்கு இருப்பிடமான ஸ்ரீய:பதி ப்ரபத்தி செய்வதற்கும் முன்பு இருப்பதாலே இங்கு ஸ்ரீமந்நாராயணனை ஸித்தோபாயமாக வித்வான்கள் அறிகிறார்கள் என்று அருளிச் செய்கிறார். இதே அதிகாரத்தில் முதல் ச்லோகத்தில்,

"ஜலதி ஸுதயா ஸார்தம் தேவோ ஜகத் பரிபாலயந் |
பரமபுருஷ: ஸித்தோபாய: ப்ரதீஷ்ட பரஸ்ஸதாம் ||"

திருப்பாற்கடலின் திருமகளாகிய பெரியபிராட்டியுடன் கூடவே உலகை ரக்ஷித்துக்கொண்டு, ஸ்வீகரிக்கப்பட்ட பரத்தை உடையவனாய்க் கொண்டு ப்ரபந்நர்களுக்கு பலனைக் கொடுக்கும் ஸித்தோபாயமாய் இருக்கிறான் எம்பெருமான் என்று அருளிச்செய்தார். இதனால் பிராட்டியும் பலனை அளிப்பவளாய்க் கொண்டு ஸித்தோபாயமாகிறாள் என்று அறிவிக்கப்பட்டதாயிற்று.

எம்பெருமானின் ஸ்வரூப நிரூபக தர்மங்கள் ஸர்வவித்யைகளிலும் வருகிற கணக்கிலே அவற்றில் ப்ரதாநமான இவ் விசேஷணமும் ஸர்வவித்யைகளிலும் அநுஸந்தேயம் என்று ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் மூலமந்த்ராதிகாரத்தில் ஸ்வாமி ஸ்ரீதேசிகன் அருளிச் செய்திருப்பதால், எம்பெருமானைப் போலே பிராட்டிக்கும் முமுக்ஷு உபாஸ்யத்வம் ஸித்திக்கிறது. அதாவது முமுக்ஷுக்களால் த்யானிக்கப்படுபவளாய் இருக்கை ஸித்திக்கிறது.

மோக்ஷத்தை விரும்புமவர்கள் யாரை உபாஸிக்கவேண்டும் என்று கேள்வி வர "காரணந்து த்யேய:" என்கிறது ஸ்ருதி. அதாவது ஜகத் காரணவஸ்துவை த்யானிக்க வேண்டும் அதாவது உபாஸிக்கவேண்டும் என்று பொருள். எம்பெருமானின் ஸ்வரூப நிரூபக தர்மங்களில் சேதனையான பிராட்டி ப்ரதாநமாய் நின்று முமுக்ஷுக்களின் த்யானத்திற்கு விஷயமாவதால், பிராட்டிக்கு ஜகத் காரணத்வ ம் இத்தால் ஸித்தித்தது.

மேலும் "மாயா வா ஏஷா நாரஸிம்ஹி ஸர்வமிதம் ச்ருஜதி ஸர்வமிதம் ஸம்ஹரதி ஸர்வமிதம் ரக்ஷதி" என்று ந்ருஸிம்ஹ தாபநீய உபநிஷத் பிராட்டிக்கு ஜகத் காரணத்வத்தை ஸ்பஷ்டமாகக் கூறுகிறது. ஸ்வாமி ஸ்ரீதேசிகன் அதிகாரஸங்க்ரஹத்தில் (46) "ஒண்தொடியாள் திருமகளும் தானுமாகி ஒரு நினைவால் ஈன்ற உயிரெல்லாம் உய்ய' என்று அருளிச்செய்கிறார். இங்கு, 'பிராட்டியும் தானும் சேர்ந்து ஒரே விதமான ஸங்கல்பத்தால் படைத்த' என்றதால், பிராட்டிக்கும் ஜகத்காரணத்வத்தைக் காட்டியதாயிற்று.

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸித்தோபாய சோதநாதிகாரத்தில் ஸ்வாமி ஸ்ரீதேசிகன் அருளிச்செய்வதாவது,

"பரஸ்வீகார ரஹிதம் ரக்ஷா ஸங்கல்ப வர்ஜிதம் |
குணாதிகமிஹ இஷ்டம்ஹி சரண்யஸ்ய விசேஷணம்" ||

"ஐகரஸ்ய ஜுஷோ: சேஷிதம்பத்யோ: ஸர்வ கர்மஸு |
விசேஷண விசேஷ்யத்வம் ச்ருதம் கஸ்மாந்த ரோசதே" ||

இந்த ப்ரபத்தி வித்யையில் பரத்தை ஸ்வீகரித்துக்கொள்ள தகுதியில்லாதனவும் ரக்ஷிக்கிறேன் என்கிற ஸங்கல்பம் அற்றதுமான குணங்கள், திருமேனி என்ற இவைகள் சரண்யனுக்கு விசேஷணமாய் இருப்பது உங்களுக்கு இஷ்டமாகிறது. ச்ருஷ்டி முதலிய கார்யங்களிலும் ஐகரஸ்யத்தை அடைந்திருக்கிற சேஷிகளான தம்பதிகளுக்கு சாஸ்த்ரத்தில் கூறப்பட்ட எம்பெருமான் விசேஷ்யமாயும் பிராட்டி விசேஷணமாயும் இருக்கை எந்த காரணத்தால் உங்களுக்கு ருசிக்கவில்லை?' என்று அருளிச்செய்கிறார்.

எல்லாக் கார்யங்களிலும் ஐகரஸ்யத்தை அடைந்திருக்கிற சேஷிகளான தம்பதிகள் என்று அருளிச்செய்திருப்பதால் பிரஹ்மவித்யையில் ஒன்றான ப்ரபத்தி வித்யையில் (ந்யாஸவித்யையில்) எம்பெருமானோடு பிராட்டியும் சேர்ந்தே சேதனர்களால் ஸமர்ப்பிக்கப்படுகிற ரக்ஷாபரத்தை ஸ்வீகரித்துக் கொண்டு மோக்ஷத்தை அளிப்பவர்களாய் ஸித்தோபாயமாகிறார்கள் என்பது இதனால் ஸித்தித்தது.

இவ்வளவால், பிராட்டிக்கு ஜகத்காரணத்வமும், மோக்ஷப்ரதத்வமும் ஸ்வாமி ஸ்ரீதேசிகனால் அருளிச் செய்யப்பட்டிருப்பதை நிரூபித்துக்கொண்டு இனி பிராட்டிக்கு விபுத்வத்தை அருளிச்செய்த இடத்தைப் பார்க்கலாம்.

ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில், த்வயாதிகாரத்தில் ஸ்வாமி ஸ்ரீதேசிகன் பிராட்டிக்கு விபுத்வத்தை அருளிச்செய்கிறார். ஸ்ரீசப்தத்துக்குக் கூறப்படும் ஆறு வகையான பொருள்களில் 'ஸ்ரீயதே', 'ச்ரயதே' என்கிற வ்யுத்பத்திகளின் பொருளைக் கூறும்போது,

"எல்லா வஸ்துக்களாலும் ஆச்ரயிக்கப்பட்டு எல்லாவற்றையும் தான் ஆச்ரயித்திருக்கும் என்று பொருளான போது, நாராயணாதி சப்தங்கள் ஸ்ரீய:பதிக்குச் சொல்லும் கட்டளையை விஷ்ணுபத்நிக்கும் சொல்லிற்றாம்"

என்று அருளிச்செய்தார். அதாவது 'நாராயண' சப்தத்தில் தத்புருஷ ஸமாஸத்தாலே ஸர்வாதாரத்வமும், பஹுவ்ரீஹி ஸமாஸத்தாலே ஸர்வவ்யாபித்வமும் இரண்டும் எம்பெருமானுக்கு ஸித்திப்பதுபோல், பிராட்டி விஷயத்திலும் 'ஸ்ரீயதே' என்கிற வ்யுத்பத்தியால் ஸர்வாதாரத்வமும், 'ச்ரயதே' என்கிற வ்யுத்பத்தியால் ஸர்வவ்யாபித்வமும் ஸித்திக்கிறது என்பதை அருளிச்செய்தார்.

இவ்வாறு ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஜகத்காரணத்வம், மோக்ஷப்ரதத்வம், விபுத்வம் ஆகியவற்றை பிராட்டியினிடத்தில் தனிப்பட நிரூபித்தருளினார்.

ஸ்வாமி ஸ்ரீதேசிகன் அருளிச்செய்த ஸ்ரீஸூக்திகளோடு விரோதிக்கும்படியாக தேசிக ஹ்ருதயத்தில் வெளிவந்த மற்ற விஷயங்களிலும் பொருந்தாமையை கண்டுகொள்வது. ஒவ்வொன்றாக எடுத்து மறுப்பு எழுத முற்பட்டால் கட்டுரை நீண்டுவிடும்.

ஸ்ரீபாஷ்யத்தையும் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தையும் முழுமையாக ஒரு சிறந்த ஸ்ரீதேசிக ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்த வித்வானிடம் நன்றாகக் காலக்ஷேபம் பண்ணி அதன் பிறகு ச்ரவணம் பண்ணின விஷயங்களை நன்கு மனனம் பண்ணி, அஜ்ஞான ஸம்சய விபர்யயமற விஷயங்களை நன்றாகப் புரிந்துகொண்ட மஹாப்ராஜ்ஞர்களுக்கே, ஸ்ரீராமாநுஜ ஸித்தாந்தத்தைத் தழுவியது ஸ்ரீதேசிக தர்சநமேயாகும் என்கிற உண்மை புலப்படும்.

ஸ்ரீபாஷ்யத்திலும் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்திலும் ஆபாத ப்ரதீதி உடைய எவர்களாலும் உண்மையான தெளிவான ஜ்ஞானத்தைப் பெற முடியாது.

# முடிவுரை

பிள்ளைலோகாசார்யர், மணவாளமாமுனிகள் முதலிய ஆசார்யர்கள் அனைவரும் எந்த ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்தவர்களோ, அதே ஸம்ப்ரதாயத்தைத்தான் வேதாந்த தேசிகனும் சேர்ந்தவர், என சில ஸித்தாந்தி ஏகதேசிகள் கூறுகின்றனர். தென்கலை ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்தவர்கள், தேசிகன் தென்கலை ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்தவரே என்றும் அவரும் பிள்ளைலோகாசார்யர் முதலிய ஆசார்யர்களுடன் ஒத்த கருத்தையே கொண்டிருந்தவர்தான் என்றும் கூறுகிற சில ஸித்தாந்தி ஏகதேசிகளின் கருத்துக்கு, இந்த 'இதுவே ஸ்ரீதேசிக ஹ்ருதயம்' என்கிற கட்டுரையின் வாயிலாக மறுப்பு தெரிவிக்கப்பட்டது. இதனால்,

1. தென்கலை ஸம்ப்ரதாயமும், ஸ்வாமி ஸ்ரீதேசிக ஸம்ப்ரதாயமும் வேறுபட்டதே என்பது உறுதியாகிறது.

2. ஸ்ரீதேசிக ஸம்ப்ரதாயத்தில் ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீஸூக்திகளில் உள்ள விஷயங்கள் யாவும் பகவத் ராமானுஜர் அருளிச்செய்த ஸ்ரீஸூக்திகளில் உள்ள விஷயங்களை அடியொற்றியே அமைந்திருக்கிறது என்பதும், தென்கலை ஸம்ப்ரதாயத்தில் பிள்ளைலோகாசார்யர் அருளிச்செய்த ஸ்ரீ ஸூக்திகளில் உள்ள விஷயங்கள் யாவும் பகவத் ராமானுஜர் அருளிச்செய்த ஸ்ரீஸூக்திகளில் உள்ள விஷயங்களுக்கு முரணான விஷயங்களைக் கொண்டதாக அமைந்திருக்கிறது என்பதும் உறுதியாகிறது.

3. ஸ்வாமி ஸ்ரீதேசிகன் அருளிச்செய்த க்ரந்தங்களிலிருந்து ஒரு சில வரிகளை மட்டும் கொண்டு மற்ற வரிகளைக் கைவிட்டு மற்ற வரிகளோடு விரோதிக்கும் வகையில், தான் எடுத்துக்கொண்ட வரிகளுக்கு தென்கலை ஸம்ப்ரதாயத்தில்

கூறப்படும் கொள்கைகளுக்கு அநுகுணமாக தனது கருத்துக்களை கூறியிருக்கிறார் என்பது அண்ணங்கராசார்யார் வெளியிட்ட 'தேசிக ஹ்ருதயம்' என்கிற கட்டுரையில் வெளிவந்த விஷயங்களால் உறுதியாகிறது.

4. "கலிகோலாஹல க்ரீடாம் வர்தயந்தி ரமாபதே:" ச்ரிய:பதிக்கு கலியின் கோலாஹலத்தினால் வரும் லீலாரஸத்தை சிலர் வளர்க்கின்றனர் என்று ஸ்வாமி ஸ்ரீதேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் சரம ஸ்லோகாதிகாரத்தில் அருளிச் செய்தது "தேசிக ஹ்ருதயம்" என்கிற தலைப்பில் வெளிவந்த விஷயங்களைப் படித்தபிறகு நன்றாகப் புரிகிறது.

5. அண்ணங்கராசார்யரால் "தேசிக ஹ்ருதயம்" என்கிற தலைப்பில் எழுதப்பட்டு வெளிவந்த விஷயங்களுக்கு மறுப்பும் பொருந்தாமையும் "இதுவே ஸ்ரீதேசிக ஹ்ருதயம்" என்ற தலைப்பில் எழுதப்பட்ட இந்த புத்தகத்தில் வெளிவந்த விஷயங்கள் மூலமாக காட்டப்பட்டது.

இந்த உண்மையை ஸஹ்ருதயர் அறிந்து கொள்வர்.

## நூற்பட்டியல்

♦ பகவத் ராமானுஜருடைய ஸ்ரீபாஷ்யம்

ஸ்வாமி ஸ்ரீதேசிகனுடைய வடகலை ஸம்ப்ரதாய க்ரந்தங்கள்

✦ ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரம்

✦ ந்யாய ஸித்தாஞ்சநம்

✦ ஸாரஸாரம்

✦ கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷை

♦ ஸ்ரீதேசிக ஸ்தோத்ரங்கள்

✦ ந்யாஸ தசகம்

✦ ந்யாஸ திலகம்

♦ ஸ்ரீதேசிக ப்ரபந்தம்

✦ அதிகார ஸங்க்ரஹம்

பிள்ளைலோகாசார்யருடைய தென்கலை ஸம்ப்ரதாய க்ரந்தங்கள்

✦ ஸ்ரீவசனபூஷணம்

✦ முமுக்ஷுப்படி

## புத்தகத்தைப் பற்றி....

திரு. அண்ணங்கராசார் 1960-ல் "தேசிக ஹ்ருதயம்" என்கிற கட்டுரையை வெளியிட்டிருந்தார். பிள்ளைலோகாசார் வழி உகந்த அண்ணங்கராசார், தன் ஸம்ப்ரதாயத்தை தான் விரும்பியபடி விளக்கி இருந்தால், அக்கொள்கைகள் யாவும் வேதாந்த ப்ரமாணங்களோடும் மற்றும் ஸ்ரீ ராமானுஜ ஸம்ப்ரதாய க்ரந்தங்களோடும் முரண்படுகின்றன என்கிற விஷயத்தையும், அவரது கொள்கைகளை அசாஸ்த்ரீயங்கள் என்று ஸ்வாமி ஸ்ரீதேசிகன் கண்டிருந்திருக்கிறார் என்கிற விஷயத்தையும் வெளியிட ஒரு புத்தக வெளியீடு தேவைப் பட்டிருக்காது.

ஆனால் "தேசிக ஹ்ருதயம்" என்கிற அவரது கட்டுரையில், அவர் பின்பற்றாத ஸ்ரீதேசிக ஸம்ப்ரதாயத்தை மாற்றி அமைக்க நினைப்பது போல இருப்பதாலும், வரும் தலைமுறையினர் ஸ்ரீதேசிக ஸம்ப்ரதாய விஷயத்தில் கலக்கம் அடையக் கூடாது என்பதாலும் "இதுவே ஸ்ரீதேசிக ஹ்ருதயம்" என்கிற தலைப்பில் இந்த புத்தகம் வெளியிடப்படுகிறது.

ஸ்ரீதேசிக ஸம்ப்ரதாய க்ரந்தங்களை காலக்ஷேப முறையில், திருக்கள்ளம் ஸ்ரீ உ.வே. நரஸிம்ஹராகவாசார் ஸ்வாமி, வில்லிவலம் ஸ்ரீ உ.வே. கிருஷ்ணமாசார் ஸ்வாமி (45ம் பட்டம் ஸ்ரீமத் அழகியசிங்கர் பூர்வாஸ்ரமம்), புரிசை ஸ்ரீ உ.வே. கிருஷ்ணமாசார் ஸ்வாமி, திருக்குடந்தை ஸ்ரீமத் ஆண்டவன் முதலான ஆசார்யர்களிடம் கற்று அறிந்த பாம்பே ஆர். ராதா அவர்கள், ஸ்ரீராமானுஜ ஸ்ரீதேசிக மற்றும் பிள்ளைலோகாசார்யர் இவர்களுடைய க்ரந்த வரிகளை சுட்டிக்காட்டி "இதுவே ஸ்ரீதேசிக ஹ்ருதயம்" என்கிற இந்த புத்தகத்தை வெளியிட்டுள்ளார்.